
பற்களை சுத்தம் செய்வது பாதி வேலை தான்...
தினமும் ஈறுகளைப் பாதுகாப்பது அந்த வேலையை பூர்த்திசெய்கிறது!
உங்கள் பற்கள் ஒழுங்காகவும் ஆரோக்யத்துடனும் இருந்தாலுங்கூட ஈறுகள் பலமற்றோ அல்லது நோயுற்றோ போனால் அவைகளை வெகு எளிதில் இழக்க நேரிடும். ஆகவே இந்த ஆபத்துக்குள்ளாகாதீர்கள்! தினமும் இருமுறை கிப்ஸ் எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகியுங்கள். பல்வைத்தியர்கள் ஈறுகளை சிகிச்சை செய்ய உபயோகிக்கும் ஸோடியம் ரிஸினோலியேட் இதில் அடங்கியுள்ளது. மேலும் இது பற்களை பளிச்சென்று வெண்மையாக சுத்தம் செய்கிறது.
கிப்ஸ்
ரிஜிஸ்டேர்ட்
எஸ்.ஆர். டூத்பேஸ்ட்
பற்களை பளிச்சென்று வெண்மையாகவும் ஈறுகளை ஆரோக்யமாகவும் வைத்திருப்பதற்கென்றே பிரத்தியேகமாக தயாரிக்கப்பட்டது.
S.R. TOOTHPASTE
for teeth and gums
S.R. TOOTHPASTE
for teeth and gums

GSR. 89-50 TM

# கல்கி பொருளடக்கம்

மலர் 11
இதழ் 52

1952 ஜூலை 27

நந்தன ௵
ஆடி 12



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# 12-வது அகில இந்திய காதி, சுதேசி, கைத்தொழில் பொருட்காட்சி

(சேலம் நகரசபையால் நடத்தப்படுவது)

●

## இசை, நடன, நாடக நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| 3-8-52 ஞாயிறு<br>மாலை 6-30 மணி | ஸ்ரீமதி கௌரி கனகசபாபதி | பாட்டு |
| இரவு 9 மணிக்கு | குமாரி ஸ்ரீ கலா & பார்ட்டி | நடனம் |
| 4-8-52 திங்கள்<br>மாலை 6-30 மணி | தஞ்சாவூர் சகோதரிகள்<br>"ஏழைபடும்பாடு" புகழ் குமாரி N. ராஜம் பதம் பாடுவார் | நடனம் |
| 5-8-52 செவ்வாய்<br>மாலை 6-30 மணி | திருக்கோயிலூர் சகோதரிகள் | பாட்டு |
| இரவு 9 மணி | சேலம் முனிசிபல் உத்தியோகஸ்தர்கள்<br>நாடக சங்கத்தார் | "மனோஹரா"<br>(நாடகம்) |
| 6-8-52 புதன்<br>மாலை 6-30 மணி | குமாரி (பேபி) கமலா | நடனம் |
| 7-8-52 வியாழன்<br>மாலை 6-30 மணி | முத்தமிழ் கலா வித்வ ரத்ன<br>T. K. S. சகோதரர்கள் | "ஔவையார்"<br>(நாடகம்) |
| 8-8-52 வெள்ளி<br>மாலை 6-30 மணி | Do | "இன்ஸ்பெக்டர்"<br>(நாடகம்) |
| 9-8-52 சனி<br>மாலை 6-30 மணி<br>10-8-52 ஞாயிறு<br>மாலை 6-30 மணி | Do | "கள்வனின் காதலி"<br>(நாடகம்) |
| 11-8-52 திங்கள்<br>மாலை 6-30 மணி | Do | "மனைவி"<br>(நாடகம்) |
| 12-8-52 செவ்வாய்<br>மாலை 6-30 மணி<br>13-8-52 புதன்<br>மாலை 6-30 மணி<br>14-8-52 வியாழன்<br>மாலை 6-30 மணி | Do | "இரத்த பாசம்"<br>(நாடகம்) |
| 15-8-52 வெள்ளி<br>மாலை 6-30 மணி | ஸ்ரீமதி K. B. சுந்தராம்பாள் & பார்ட்டி | பாட்டு |
| 16-8-52 சனி<br>மாலை 6-30 மணி | குமாரி ஹேமமாலினி<br>(Daughter of late C. K. Vijayaraghavan, I.C.S.) | நடனம் |
| 17-8-52 ஞாயிறு<br>மாலை 6-30 மணி | ஸ்ரீ கிருஷ்ண விஜய சபா, சென்னை<br>(எல்லாம் பெண்கள் நடிப்பது) | "சகுந்தலா"<br>(நாடகம்) |
| 18-8-52 திங்கள்<br>மாலை 6-30 மணி | சேவா ஸ்டேஜ் சர்வீஸ், சென்னை<br>S. V. சகஸ்ரநாமம், V. C. கணேசன், V. K. ராமசாமி,<br>S. J. [illegible], மைனாவதிபாய், தேவா & சக்குபாய் | "வைத்தியக்காரன்"<br>(நாடகம்) |
| 19-8-52 செவ்வாய்<br>மாலை 6-30 மணி | சேவா ஸ்டேஜ் சர்வீஸ், சென்னை<br>S. V. சகஸ்ரநாமம், V. C. கணேசன், V. K. ராமசாமி,<br>மைனாவதிபாய், AVM. ஸிந்த "பராசக்தி" புகழ் M. பண்டரிபாய் | "கண்கள்"<br>(நாடகம்) |
| 20-8-52 புதன்<br>மாலை 6-30 மணி | நகைச்சுவை அரசு N. S. கிருஷ்ணன்,<br>T. A. மதுரம் & பார்ட்டி | "இழந்த காதல்"<br>(நாடகம்) |
| 21-8-52 வியாழன்<br>மாலை 6-30 மணி | நடிப்புப் புலவர் K. R. ராமசாமி & பார்ட்டி | "வேலைக்காரி"<br>(நாடகம்) |
| 22-8-52 வெள்ளி<br>மாலை 6-30 மணி | Do | "ஓர் இரவு"<br>(நாடகம்) |
| 23-8-52 சனி<br>மாலை 6-30 மணி | Do | "துளி விஷம்"<br>(நாடகம்) |
| 24-8-52 ஞாயிறு<br>மாலை 6-30 மணி | ஸ்ரீமதி லலிதா, பத்மினி, ராகினி & பார்ட்டி | நடனம் |

சீஸன் டிக்கெட்டுகள்: முதல் வகுப்பு ரூ. 100/- இரண்டாம் வகுப்பு ரூ. 60/-
(எல்லா நிகழ்ச்சிகளுக்கும்)

குறிப்பு:—விவரம் அன்றாடம் வரும் நோட்டீஸில் காண்க.

பொருட்காட்சிக் கமிட்டியார்

கல்கி

மலர் 11

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

இதழ் 52

# எழுபத்தொரு லட்சம் குருட்டுக் குழந்தைகள்

"அம்மா! குருடன்!" என்று சொன்னால், உடனே மனமிரங்காதவர்களைக் காண்பது அரிது. பிச்சைக்காரர்களைக் கண்டால் சாதாரணமாய் அருவருப்பு அடைகிறவர்கள்கூட, குருட்டுப் பிச்சைக்காரர்களைக் கண்டால் இரக்கம் அடைவார்கள். அதிலும், கண் பார்வை இல்லாத குழந்தைகள் பிச்சை எடுக்க வந்து விட்டால், எப்பேர்ப்பட்ட கல்நெஞ்சமும் கரைந்து விடும். கையிலே சில்லறை இல்லாதவர்களும் நோட்டை மாற்றியாவது குருட்டுக் குழந்தையின் தகர டப்பாவில் காலணா 'டாண்' என்று சத்தம் கேட்கும்படி போட்டு விட்டுத்தான் போவார்கள்.

அப்படியிருக்க, இந்தச் சென்னை மாகாணத்தில் தற்போது எழுபத்தொரு லட்சம் குருட்டுக் குழந்தைகள் இருக்கிறார்கள் என்று சொன்னால், அது எவ்வளவு பயங்கரமான விஷயம்? இதை நமது புதிய கல்வி மந்திரி டாக்டர் எம். வி. கிருஷ்ண ராவ் சட்டசபையில் கல்வி இலாகா மானியத்தின்போது வெளியிட்டார். அதாவது பள்ளிக்கூடத்துக்குப் போக வேண்டிய வயதுள்ள குழந்தைகள் 71 லட்சம் பேர் பள்ளிக்கூடம் போக வசதியில்லாம லிருப்பதாகக் கூறினார்.

"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு!"

என்றார் திருவள்ளுவர். அவர் பொய்யா மொழிப்புலவர் அல்லவா! ஆகையினாலேயே எண்ணும் எழுத்தும் கல்லாமலிருக்கும் 71 லட்சம் குழந்தைகளையும் குருட்டுக் குழந்தைகள் என்று நாம் குறிப்பிடுகிறோம். ஆனால் அவர்கள் அப்படிக் குருட்டுக் குழந்தைகளாக இருக்க வேண்டிய அவசியமில்லை. எளிதில் அவர்களுடைய கண்களைத் திறந்து விடலாம். எண்ணும் எழுத்தும் கற்பித்து அவர்களைத் துல்லியமான கண்பார்வை உள்ளவர்களாக்கலாம். அந்தப் பொறுப்பு சமூகத்தினுடையது; ஜனநாயக சர்க்காருடையது. தார்மிக முறையின்படி யில்லாமல், இந்தியாவின் சுதந்திர அரசியல் சட்டத்தின் பிரகாரமும் அந்தப் பொறுப்பு சமூகத்துக்கும் சர்க்காருக்கும் ஏற்பட்டிருக்கிறது. சுதந்திர சாஸனம் நிறைவேறிப் பத்து வருஷ காலத்துக்குள் படிக்கும் வயதுள்ள குழந்தைகள் எல்லாருக்கும் பள்ளிக்கூடங்களில் எண்ணும் எழுத்தும் கற்பிக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று இந்தியாவின் சுதந்திர சாஸனம் விதித்திருக்கிறது.

ஆனால் சாஸனம் நிறைவேறி மூன்று வருஷங்கள் ஆகியும் அந்தப் பொறுப்பை நிறைவேற்றுவதற்கான திட்டம் இதுவரையில் வகுக்கப் படவில்லை. அடுத்த ஏழு வருஷத்தில் அது சாத்தியமாகும் என்பதற்கு அறிகுறியே இதுவரையில் காணப்படவில்லை.

புதிய கல்வி மந்திரி டாக்டர் எம். வி. கிருஷ்ண ராவ் கல்வி இலாகா மானிய விவாதத்தின் முடிவில் நிகழ்த்திய பிரசங்கத்திலேதான் அதற்கு ஒரு சிறிய அறிகுறி வெளியாகி யிருக்கிறது.

மேற்படி பிரசங்கத்தில் கல்வி மந்திரி சில புள்ளி விவரங்களை வெளியிட்டார். தற்சமயம் சென்னை மாகாணத்தில் கல்விக்காக வருஷம் 12 கோடி ரூபாய் சர்க்கார் செலவிடுவதாகச் சொன்னார். ஒரு தனி இலாகாவுக்கு அதிகமாகச் செலவிடும் தொகை இதுதான் என்று கூறினார். 1946-ல் 4 கோடி 60 லட்சம் செலவானது இப்போது 12 கோடியாகப் பெருகியிருக்கிறதென்றும் சொன்னார். இந்தப் பன்னிரண்டு கோடி ரூபாயில் 7 கோடி ரூபாய் ஆரம்பக் கல்விக்காகச் செலவிடுவதாகக் கூறினார். 1945-46ல் 3 கோடி 90 லட்சம் ரூபாய் செலவிட்டதையும் 1952–53ல் இது இரண்டு மடங்காகப் பெருகியிருப்பதையும் குறிப்பிட்டார். சர்க்கார் ஆரம்பக் கல்விக்காகச் செலவிடும் 7 கோடி ரூபாயைத் தவிர ஸ்தல ஸ்தாபனங்கள் 3 கோடி ரூபாய் செலவிடுவதையும் ஞாபகப்படுத்தினார். ஆக, பத்து கோடி ரூபாய் பொது மக்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட வரிப் பணம் ஆரம்பக் கல்விக்குச் செலவாகிறதென்று எடுத்துக் காட்டினார்.

சரி; சென்ற ஆறு வருஷத்தில் பணச் செலவு இவ்வளவு பெருகியிருக்கிறதே! அதற்குத் தகுந்தபடி ஆரம்பப் பள்ளிக்கூடங்களும், அந்தப் பள்ளிக்கூடங்களில்

படிக்கும் குழந்தைகளின் தொகையும் பெருகி யிருக்கிறதா என்றால், அதுதான் இல்லை!

செலவு இரண்டு மடங்கு ஆகியிருக்கிறதே; படிக்கும் குழந்தைகளின் தொகை ஒன்றரை மடங்காவது ஆகியிருக்கிறதா என்றால், அதுவும் இல்லை.

ஆரம்பக் கல்வி கற்கும் குழந்தைகளின் தொகை ஐந்தில் ஒரு பங்கு விதம்தான் அதிகமாகி யிருக்கிறது.

இது சம்பந்தமான புள்ளி விவரங்களை இப் பக்கத்தின் அடிக் குறிப்பில் காணலாம். *

பின்னே, அதிகப்படி பணச் செலவு எங்கே போயிற்று என்றால், ஆசிரியன்மார்களின் சம்பளங்களைக் கூட்டிக் கொடுப்பதில் போயிற்று.

ஆசிரியர்களின் சம்பளங்களை உயர்த்தியது நியாயமல்லவென்று யாரும் சொல்ல மாட்டார்கள். இப்போது உயர்த்தியிருப்பது கூடப் போதாது. இன்னும் உயர்த்தியேயாக வேண்டும். ஆசிரியர்களும் இதற்குக் கிளர்ச்சி செய்கிறார்கள்; அரசியல் வாதிகளும் அக் கிளர்ச்சியைப் பலமாக ஆதரிக்கிறார்கள்.

ஆசிரியர்களின் சம்பளங்களைக் கூட்டிக் கொடுப்பது எப்படி! சர்க்கார் புதையல் எடுத்துக் கொடுக்க முடியுமா! அல்லது பணம் காய்க்கும் மரம் கட்டுப் பயிராக்க முடியுமா! ஜனங்களிடம் வரி வசூலித்துத்தான் ஆக வேண்டும்.

"புது வரி போடக் கூடாது. பழைய வரியை உயர்த்தக் கூடாது" என்று ஒருபுறம் காது செவிடு படும்படியான கூச்சல் போடுகிறார்கள். இந்தக் கூச்சலைப் பொருட்படுத்தாமல் சர்க்கார் புது வரிகள் விதித்து, பழைய வரிகளை உயர்த்தி, ஆசிரியர்களின் சம்பளங்களை ஓரளவு உயர்த்துகிறார்கள் என்று வைத்துக் கொள்வோம்.

தற்சமயம் பள்ளிக்கூடம் போகாமலும், எண்ணும் எழுத்தும் கற்காமலும் இருக்கும் 71 லட்சம் குருட்டுக் குழந்தைகளின் கதி என்ன!

அவர்களைப் படிக்க வைப்பதற்குச் செலவு எவ்வளவு ஆகும்? அதற்கு வேண்டிய பணத்துக்கு என்ன வழி!

இப்போது போகும் போக்கிலேயே போய்க் கொண்டிருந்தால், அடுத்த ஏழு வருஷத்துக்குப் பிறகு (அதாவது அரசியல் சாஸனத்தில் கண்ட பத்து வருஷங்களுக்குப் பிறகு) நிலைமை எப்படியிருக்கும் தெரியுமா!

ஆரம்பக் கல்விக்குச் சர்க்காரின் செலவு பதினாறு கோடி ரூபாயாகப் பெருகியிருக்கும்.

ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் படிக்கும் குழந்தைகளின் தொகை 42 லட்சத்திலிருந்து 50 லட்சமாகப் பெருகியிருக்கும்.

ஆனால், அதே ஏழு வருஷத்தில் புதிய குழந்தைகள் பிறந்து அவர்களும் வளர்ந்து வருவார்கள்.

ஆகையால், எண்ணும் எழுத்தும் அறியாத கண்ணில்லாக் குருட்டுக் குழந்தைகளின் தொகையும் 80 லட்சம் ஆகப் பெருகிவிடும்!

இது திருப்திகரமான நிலைமை என்று யாராவது சொல்ல முடியுமா! அல்லது இதைப்பற்றி எண்ணிப் பார்த்துக் கவலைப்படாமல்தான் யாரேனும் இருக்க முடியுமா!

கல்வி மந்திரி டாக்டர் எம். வி. கிருஷ்ணராவ் கவலைப்படுகிறார். அவர் கவலைப்படுவதால் ஒருவேளை விமோசனமும் பிறக்கலாம் என்று எண்ணி நாம் ஆறுதல் அடைய வேண்டியிருக்கிறது.

* * *

அரசியல் சாஸனத்தில் கண்டபடி அடுத்த ஏழு வருஷத்திற்குள் இம்மாகாணத்தில் 130 லட்சம் குழந்தைகள் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் இருக்க வேண்டும்.

இது எப்படிச் சாத்தியம்!

தற்சமயம் ஆரம்பக் கல்விக்குச் செலவாகிற முறையிலேயே செலவழிப்பதென்றால், வருஷத்துக்கு 30 கோடி ரூபாய் விதம் செலவழிக்க வேண்டி வரும்!

ஆரம்ப ஆசிரியர்களுக்குச் சம்பளம் இப்போது மிக குறைவு என்று எல்லாரும் ஒத்துக் கொள்கிறார்கள். மூன்றில் ஒரு பங்கு விதம் கூட்டிக் கொடுப்பதாயிருந்தாலும் பத்து கோடியாவது அதிகம் வேண்டும். ஆக, 40கோடி ரூபாய் ஆயிற்று.

புதிதாக வேண்டிய இரண்டு லட்சம் ஆரம்ப ஆசிரியர்களைப் பயிற்சி செய்வதற்கு மட்டும் மொத்தம் ஒன்பது கோடி ரூபாய் செலவாகும்.

இவ்வளவு மட்டும் போதுமா? ஆரம்பப் பள்ளிக்கூடங்களுக்குக் குழந்தைகள் சரிவர இரண்டு வேளையும் வர வேண்டுமானால், பள்ளிக்கூடங்களிலேயே இலவசமாக மத்தியானச் சாப்பாடு போட வேண்டும் என்ற கூக்குரலைக் கேட்கிறோம்.

நூற்று முப்பது லட்சம் குழந்தைகளுக்கு ஒரு வேளை சாப்பாடு போடுவதற்குக் குறைந்த பட்சம் எட்டு கோடி ரூபாய் செலவாகும். (நடுவில் உணவுக் கண்டிராக்டர்கள் பணமாகச் சாப்பிடத் தொடங்கினால் இன்னும் அதிகமும் ஆகும்.) ஆக, குறைந்த பட்சம் வருஷத்துக்கு ஐம்பது கோடி ரூபாய் ஆரம்பக் கல்விக்கு மட்டும் செய்தால் ஆரம்ப ஆசிரியர்களுக்கு நல்ல சம்பளம் கொடுத்து ஏழு வருஷங்களுக்குள்ளே 130 லட்சம் குழந்தைகளையும் படிப்பிக்கலாம்.

இது சாத்தியமான காரியமா? சென்னை அரசாங்கமும் ஸ்தல ஸ்தாபனங்களும் ஆரம்பக் கல்விக்கு மட்டும் வருஷம் 50 கோடி ரூபாய் செலவழிக்கக் கூடிய நிலைமை அடுத்த ஏழு வருஷத்தில் ஏற்படக்கூடும் என்று எதிர்பார்க்க முடியுமா!

இது ஒரு நாளும் சாத்தியமாகப் போவதில்லை என்பதை லவலேசமாவது மூளையுள்ள மனிதர் எவரும் ஒப்புக் கொள்வார்கள்.

ஆகவே வேறு காரிய சாத்தியமான வழிகளைச் சிந்தித்துப் பார்க்க வேண்டியது அவசியம்.

கல்வி மந்திரி டாக்டர் எம். வி. கிருஷ்ணராவ் அவ்விதம் சிந்திக்கத் தொடங்கி யிருப்பது பற்றி ஓரளவு திருப்தி அடைகிறோம்.

| * வருஷம் | ஆரம்பப் பள்ளிக் கூடங்கள் | படித்த குழந்தைகள் | சர்க்கார் செலவு (லட்சம் ரூ.) | ஸ்தல ஸ்தாபனங்களின் செலவு (லட்சம் ரூ.) | மொத்தச் செலவு |
|---|---|---|---|---|---|
| 1946—47 | 36,148 | 34 லட்சம் | 390 | 200 | 590 லட்சம் |
| 1949—50 | 37,812 | 40 லட்சம் | 609 | 307 | 916 லட்சம் |
| 1951—52 | 39,000 | 42 லட்சம் | 708 | 319 | 1027 லட்சம் |

# இரண்டு பிள்ளைகள்!




"கரை போட்ட வேஷ்டிகள், துண்டுகள், புடவைகள் இவற்றைத் தயாரிப்பதைக் கைத்தறி நெசவாளருக்கே ஒதுக்கிவிட வேண்டும். ஆலைகளில் இந்த ரகத் துணிகள் உற்பத்தி செய்வதை நிறுத்தி விடவேண்டும்" என்று ராஜாஜி கோரி யிருக்கிறார்.

---

இப்போதுள்ள ஆரம்பப் பள்ளிக் கூடங்களையும் ஆசிரியர்களையும் கொண்டே அதிகமான பிள்ளைகளுக்குப் படிப்பு அளிக்கும் முறையில் அவர் சிந்திக்கத் தொடங்கி யிருக்கிறார்.

குழந்தைகளுக்கு ஒரு வேளை மட்டும் பள்ளிக் கூடம் நடத்தும் ஏற்பாடு பற்றி யோசித்து வருவதாக அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

ஒரு வேளைப் பள்ளிக்கூடத்தின் மூலமாக எல்லாப் பிள்ளைகளுக்கும் கண் திறந்து விடலாம். அதாவது அத்தியாவசியமாக வேண்டிய கல்வியை எல்லாக் குழந்தைகளுக்கும் அளித்து விடலாம். எண்ணும் எழுத்தும் கற்பித்து விடலாம்.

கிராமாந்தரத்துப் பிள்ளைகள் தத்தம் பெற்றோர்களின் தொழில்களை அடியோடு மறந்து பின்னால் எந்த வேலைக்கும் லாயக்கில்லாமல் போகும் நிலைமை ஏற்படாது.

பள்ளிக்கூடங்கள் சற்றுத் தூரத்தில் இருந்த போதிலும் பிள்ளைகள் வந்து விட்டுத் திரும்பிப் போகச் சௌகரியமா யிருக்கும்.

ஏழைப் பெற்றோர்களும் பிள்ளைகளைப் பள்ளிக் கூடங்களுக்கு அனுப்ப முன் வருவார்கள். நீடித்து அனுப்புவார்கள். இரண்டொரு வருஷம் அனுப்பி விட்டு நிறுத்தி விட மாட்டார்கள்.

மத்தியானச் சாப்பாடு போட வேண்டிய பொறுப்பு இல்லை. அதன் மூலம் (அதாவது குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடங்களில் உணவு தரும் கண்டிராக்டுகளின் மூலம்) ஏற்படும் அளவில்லாத வீண் செலவு தடுக்கப்படும்.

காலையில் பள்ளிக்கூடத்துக்கு வந்து போகும் பிள்ளைகள் மாலையில் வீட்டிலோ, வயலிலோ, தொழிற்சாலையிலோ, அல்லது பள்ளிக்கூடத்தை அடுத்த தோட்டத்திலோ கலபமான உபயோகமான கைத்தொழில்களைக் கற்றுக் கொண்டு வருவார்கள்.

இம்முறையில் காந்தி மகானுடைய ஆதாரக் கல்வித் திட்டம் ஓரளவு உடனடியாக மாகாணம் முழுவதிலும் நிறைவேற்றி வைக்கப்படலாம்.

இரண்டு வேளையும் பள்ளிக்கூடத்தில் கற்பிக்க விரும்பாத ஆசிரியர்களும் பிற்பகலில் வேறு உப தொழில்கள் மூலம் தங்கள் வருமானத்தைப் பெருக்கிக் கொள்ளலாம்.

கல்வி மந்திரி டாக்டர் கிருஷ்ணராவ் இந்த ஏற்பாட்டினால் விளையக் கூடிய மேற்படி நலன்களை யெல்லாம் தமது பிரசங்கத்தில் ஒருவாறு குறிப்பிட்டிருக்கிறார்.

இந்த முறையிலேதான் அடுத்த ஏழு வருஷத்தில் இம் மாகாணத்திலுள்ள குழந்தைகளை யெல்லாம் பள்ளிக்கூடங்களில் சேர்த்து எண்ணும் எழுத்தும் கற்பித்துக் கண்ணைத் திறந்து விடுவது சாத்தியமாகக்கூடும் என்பதையும் சொல்லி யிருக்கிறார்.

பழைய முறைகளில் ஊறிக் கறடு தட்டிப் போன கல்வி இலாகா இந்தப் புதிய ஏற்பாட்டை இலேசில் ஒத்துக் கொள்ளாது. பல ஆட்சேபங்களைக் கற்பனை செய்து முட்டுக்கட்டைகளை ஏராளமாகப் போட்டுக் கொண்டுதானிருக்கும்.

அந்த முட்டுக்கட்டைகளை நீக்கிப் புதிய கல்வி மந்திரி தமது காலத்தில் ஆரம்பக் கல்வியை விஸ்தரிக்கச் செய்தாரானால் அவர் இந்தியா தேசத்துக்கே வழிகாட்டியவராவார்! லட்சக் கணக்கான ஏழைக் குழந்தைகளுக்குக் கண் திறந்து விட்ட புண்ணியத்தையும் கட்டிக் கொள்வார்!

# "நாங்கள்தான் வரி கொடுப்போம்!

கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை என்ற பழமொழி வழங்குகிறது. அத்துடன் "கூழைக் குடித்துக் கொண்டே வசை பாடவும் ஆசை" என்பதையும் சேர்த்துக் கொள்ளலாம். இந்த மூன்று விதமான ஆசையும் கொண்டவர்களைப் பார்க்க வேண்டுமானால், சென்னைச் சட்டசபையில் உள்ள எதிர்க் கட்சி அங்கத்தினர்களைப் பார்க்கலாம்.

இந்த அபூர்வ பிரகிருதிகள் ஒரு பக்கத்தில் "ஆசிரியர்களுக்குச் சம்பளங்களை உயர்த்துங்கள்; என். ஜி. ஓக்களுக்குச் சம்பளங்களையும் படிகளையும் உயர்த்துங்கள்; போலீஸ்காரர்களுக்குச் சம்பளம் படிச் செலவுடன் வீட்டு வாடகையை உயர்த்திக் கொடுங்கள்; பஞ்சப் பிரதேசங்களில் வேலையில்லாமல் கூலி கொடுங்கள்; கூலி கொடுத்துச் சாப்பாடும் போடுங்கள்; எல்லோரையும் படிக்க வையுங்கள்; மாணவர்களிடம் சம்பளம் வாங்குவதை நிறுத்தி விடுங்கள்" என்றெல்லாம் வாய்த் தாராளமான யோசனைகளைச் சொல்லுகிறார்கள்.

மற்றொரு புறத்தில், "புதிய வரிகளைப் போடாதீர்கள்; பழைய வரிகளைக் குறைத்து விடுங்கள்" என்றும் சொல்லுகிறார்கள்.

அவர்களுடைய யோசனைகளில் எதையாவது ஒப்புக்கொண்டு செய்துவிட்டாலோ, "ஐயையோ! இப்படி அநியாயம் செய்து விட்டீர்களே! எங்கள் வயிற்றைப் பற்றி எரிகிறதே!" என்று ஆரம்பித்து, வசை புராணம் பாடித் தீர்க்கிறார்கள்.

இப்படி எது செய்தாலும் அதிருப்தி காட்டித் திட்டும் எதிர்க் கட்சிக்காரர்களைக் காட்டிலும், காங்கிரஸ் சர்க்கார் யார்மீது வரி விதிக்க உத்தேசிக்கிறார்களோ, அவர்கள் எவ்வளவோ மேலானவர்கள் என்று சொல்ல வேண்டும். அதற்கு அறிகுறிகள் சில சமீபத்தில் வெளியாகியிருக்கின்றன.

உதாரணமாக, மோட்டார் பஸ் சொந்தக்காரர்களைப் பாருங்கள். அவர்கள் சமீபத்தில் மகாநாடு கூடினார்கள். அம் மகாநாட்டில் அவர்கள் செய்த முக்கியமான தீர்மானம் என்ன தெரியுமா?

"நாங்கள்தான் வரி கொடுப்போம்; பஸ் பிரயாணிகளிடம் அந்த வரி வசூலிக்க மாட்டோம்" என்பதுதான்!

புதிய பட்ஜட்டில் கண்ட வரிப் பிரேரணைகளில் பஸ் பிரயாணிகளிடம் மைலுக்கு ஒரு தம்பிடி வீதம் அதிகப்படி கட்டணம் வசூலித்துச் சர்க்காருக்குக் கொடுக்கும் யோசனையும் ஒன்று. இப்படி வசூலித்துக் கொடுக்கும் தொகையிலிருந்து, காலனுக்கு இரண்டு அணா வீதம் உயர்த்தப்பட்ட பெட்ரோல் வரியை மோட்டார் பஸ் சொந்தக்காரர்களுக்குத் திருப்பிக் கொடுத்து விடுவதாகச் சர்க்கார் சொன்னார்கள்.

ஆனால் மோட்டார் பஸ் சொந்தக்காரர்கள் என்ன சொல்லுகிறார்கள், தெரியுமா?

"வேண்டாம்; பஸ் பிரயாணிகளின் கட்டணத்தை உயர்த்த வேண்டாம். பெட்ரோல் வரி உயர்வை நாங்களே கைவிட்டுக் கொடுத்து விடுகிறோம்! பஸ் கட்டணத்தை அதிகப்படுத்தும் யோசனையைக் கைவிட்டு விடுங்கள்!" என்று சர்க்காருக்குத் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

அப்படித் தாங்கள் கை நஷ்டப்படத் தயாராயிருக்கிற காரணம் இன்னதென்பதையும் அவர்கள் அறிவித்திருக்கிறார்கள்.

மைலுக்கு ஒரு தம்பிடி வீதம் உயர்த்தி வசூலிப்பது, அதற்குச் சரியானபடி கணக்கு வைப்பது,— இவற்றிலுள்ள கஷ்டங்களைக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

ஆனால் முக்கிய காரணம் அவை அல்ல; பஸ் கட்டண உயர்வின் மூலம் தினம் தினம் ஐந்து லட்சம் மோட்டார் பிரயாணிகளின் அதிருப்திக்குச் சர்க்கார் ஆளாக நேரிடும் என்பதுதான் அவர்கள் குறிப்பிட்டிருக்கும் முக்கிய காரணம்.

ராஜாஜி சர்க்கார் நீடித்து நிலைத்து நின்று தொண்டு செய்ய வேண்டும் என்பதில் நம்மில் பலரைப் போல் பஸ் சொந்தக்காரர்களும் சிரத்தை கொண்டிருக்கிறார்கள்.

ஆகவே, ராஜாஜி சர்க்கார் எந்த விதத்திலும் மக்களின் அதிருப்தியைச் சம்பாதித்துக் கொள்வதை அவர்கள் விரும்பவில்லை.

இது காரணமாகவே, "பெட்ரோல் வரி உயர்வை நாங்களே கொடுத்து விடுகிறோம்; பஸ் கட்டணத்தை உயர்த்த வேண்டாம்!" என்று கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

பஸ் கட்டணம் உயர்த்துவதினால் கிடைக்கக் கூடிய அவ்வளவு வருமானம் பெட்ரோல் வரியினால் மட்டும் கிடைக்காது என்பது உண்மைதான்.

ஆயினும் பஸ் சொந்தக்காரர்களின் தீர்மானம் ராஜாஜி சர்க்காருடன் ஒத்துழைக்க வேண்டும் என்னும் திடமான மனப்பான்மைக்கு அறிகுறி என்பதில் சந்தேகமில்லை.

அந்த மனப்பான்மையைச் சர்க்கார் பயன்படுத்திக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம்.

வருமானத்தை அதிகப் படுத்துவதற்கு இன்னும் பல யோசனைகளையும் பஸ் சொந்தக்காரர்கள் வெளியிட்டிருக்கிறார்கள்.

அவற்றையெல்லாம் நமது நிதி மந்திரி நன்றாகப் பரிசீலனை செய்து பார்க்கட்டும்.

அப்படியும் அவசியமான அளவுக்கு (அதாவது வரவு செலவைச் சரிக்கட்ட வேண்டிய அளவுக்கு) வருமானம் கிட்டாவிட்டால், பஸ் சொந்தக்காரர்களிடம் "இன்னும் கொஞ்சம் அதிகமாக ஒத்துழையுங்கள்!" என்று கேட்கட்டும்.

ஒத்துழைக்கிறோம் என்று முன் வருகிறவர்களைப் புறக்கணிக்க வேண்டாம்.

ஏறக்குறைய சகலராலும் ஆட்சேபிக்கப்படும் பஸ் கட்டண வரி உயர்வு விஷயத்தில் பிடிவாதம் காட்டவும் வேண்டாம்.

அதற்குப் பதிலாக, பஸ் சொந்தக்காரர்களைப் போல் இன்னும் யார் யார் "நாங்கள் தான் வரி கொடுப்போம்!" என்று முன்வரக் கூடியவர்கள் என்று தேடிப் பார்ப்பது உசிதமாயிருக்கும்.

# டப்பா சங்கீதத்துக்குச் சப்பைக் கட்டு!

"மூன்று பிள்ளைகள்" என்ற ஜெமினி படத்தில் ஹாஸ்ய நடிகர் ஸ்ரீ நாராயணராவ் படாதிபதியாக நடித்துச் சக்கைப்போடு போட்டிருக்கிறார். படத்தில் முக்கியமான சோகக் கட்டத்தில் பாட்டு அமைப்பதற்காகப் பம்பாயிலிருந்து வந்த மியூஸிக் டைரக்டரை ஒரு மெட்டுத் தயாரிக்கச் செய்கிறார். பம்பாய் சங்கீத டைரக்டர் பிரமாதமான தாளக் கட்டுடன் கூடிய

# என்ன பொருத்தம்!



சென்னைச் சட்டசபையில் கம்யூனிஸ்ட் கட்சியார் மதுவிலக்குச் சட்டத்தை எதிர்த்து வோட்டுக் கொடுத்தார்கள். அவர்களுடைய கொடியிலே இந்தச் சிறிய மாறுதலைச் செய்தால் பொருத்தமாயிருக்குமல்லவா?

---

டப்பா மெட்டு ஒன்றைச் சொல்கிறார். "இது என்ன ஐயா! சோகத்துக்குப் பொருத்தமாயில்லையே! கேட்பவர்கள் டான்ஸ் ஆடத் தொடங்கி விடுவார்கள் போலிருக்கிறதே! வேறு மெட்டுப் பாருங்கள்!" என்கிறார் படாதிபதி. உடனே பம்பாய் மியூஸிக் டைரக்டர் ஐரோப்பிய சங்கீத மெட்டு ஒன்றை எடுத்து இருதயம் பிளக்கும்படியான சோக ரஸத்துடன் மூச்சு முட்டும்படி பாடி முடிக்கிறார். "இதுவும் பொருத்தமாயில்லை. ஏதோ இங்கிலீஷ் சங்கீதமாயிருக்கிறது! நான் பாடுகிறேன் கேளும்!" என்று படாதிபதி கூறி, "அப்பா மகனே!" என்ற சந்திரமதி புலம்பல் பாட்டைப் பாடுகிறார்.

இந்தக் கட்டத்தில் காமெடியன் நாராயணராவ் வெகு நன்றாக நடித்திருப்பதுடன், தற்கால சினிமா மெட்டுக்களின் அவலட்சணத்தையும் நன்றாக எடுத்துக் காட்டி நையாண்டி செய்திருக்கிறார்.

இவ்வாறே இன்னும் இரண்டொரு தமிழ்ப் படங்களிலும் ஸினிமாக்களில் சமீப காலத்தில் பிரபலமாகியுள்ள டப்பா சங்கீதத்தைக் கேலி செய்திருக்கிறார்கள்.

நல்லது; இவ்விதம் 'பாக்ஸ் ஆபீஸ் பிரதானம்' என்று கூறும் படாதிபதிகளுக்கே பொறுக்க முடியாமற் போயிருக்கும் ஸினிமா சங்கீதம் இந்திய சர்க்காரின் புதிய விளம்பர இலாகா மந்திரி ஸ்ரீ கேஸ்கரின் செவிகளையும் கொஞ்சம் உபத்திரவித்திருப்பதாகக் காண்கிறது. அவர் சில நாளைக்கு முன்பு பம்பாய்ப் பட முதலாளிகளின் மகாநாட்டைத் திறந்து வைத்தபோது "இந்தியப் படங்கள் நாளுக்கு நாள் மோசமாகி வருகின்றன. இப்படியே மோசமாகி வந்தால் இந்திய சர்க்கார் குறுக்கிட வேண்டியதாயிருக்கும்" என்று எச்சரித்தார். "நீர் குறுக்கிட்டு நாசமற்றுப் போனீர்" என்று படாதிபதிகள் மனதிற்குள் நினைத்துக் கொண்டு, தங்கள் வேலையை வழக்கம் போல் பார்க்கப் போனார்கள்.

ஆனால் ரேடியோ நிலையங்களில் மட்டரகமான ஸினிமா இசைத் தட்டுக்களை வைப்பது குறைக்கப்படும் என்ற செய்தி வந்ததோ, இல்லையோ, படாதிபதிகள் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தார்கள். "ரஸிகர்களுக்காக ரேடியோவா! ரேடியோவுக்காக ரஸிகர்களா! ரஸிகர்கள் விரும்புகிறதை ரேடியோக்காரர்கள் கொடுக்க வேண்டியதுதானே! டப்பா சங்கீத ரஸிகர்களே! தூங்காதீர்கள்! விழித்து எழுங்கள்! ரேடியோ நிலையத்தாருக்கு உங்கள் விருப்பத்தைத் தெரிவியுங்கள்! பத்திரிகைகளுக்கும் எழுதுங்கள்!" என்றார்கள்.

அவ்வளவுதான்; டப்பா சங்கீதத்துக்குச் சப்பைக் கட்டுக்கட்டிப் பல கடிதங்கள் பத்திரிகைகளில் வெளியாவதைப் பார்க்கிறோம்!

* * *

முதலாவது, 'ரஸிகர்களின் அபிப்பிராயம்' ஒரு நிலையில்லாத, சந்தேகாஸ்பதமான, சஞ்சலிக்கும் சரக்கு. "ரஸிகர்கள் விரும்புகிறார்கள்" என்று கருதிப் பற்பல விரஸபாவங்கள் உள்ள படங்களைப் படாதிபதிகள் கொண்டு வருகின்றனர். பத்துப் படங்களில் ஒன்றுதான் வெற்றியடைகிறது. மற்ற ஒன்பதும் வெளியான சுவடே தெரியாமல் மறைந்து விடுகின்றன. ஆகையால், ஸினிமாப் பாட்டுக்கள் எல்லாவற்றையும் ரஸிகர்கள் விரும்புவதாகச் சொல்ல முடியாது. ரஸிகர்களின் விருப்

பத்தைக் கொண்டு முடிவு செய்வதா யிருந்தால், இத்தனை வாரம் ஓடிய அல்லது ஓடச் செய்யப் பட்ட அல்லது பிடித்துத் தள்ளி ஓடிய படங் களிலே வரும் பாட்டுக்களை மட்டுமே ரேடியோ வில் வைக்க வேண்டு மென்று ஏற்படுத்த வேண்டி யிருக்கும்.

இரண்டாவது, படாதிபதிகள் படம் வெளியிடு வதற்கும் இந்திய சர்க்கார் ரேடியோ நிலையம் நடத்துவதற்கும் வித்தியாசம் நிரம்ப உண்டு.

ஜனங்கள் விரும்புவதையே ரேடியோவில் தர வேண்டும் என்றால், பிரசங்கங்களுக்கும் இது பொருந்துமல்லவா! கடற்கரையிலோ, காந் சந்தி யிலோ, சந்தைக் கூட்டத்திலோ யாருடைய பேச் சுக்கு அதிகமான கூட்டம் கூடுகிறதோ, அவர் களையா ரேடியோவில் பேசச் சொல்கிறார்கள்!

ஆசிரியர்கள், பேராசிரியர்கள், கல்வித் துறை நிபுணர்கள், இலக்கிய விமரிசகர்கள் முதலியவர் களை யல்லவா ரேடியோவில் பிரசங்கம் செய்யச் சொல்கிறார்கள்! இவர்களை வெளியிலே பொதுக் கூட்டத்தில் பேசச் சொன்னால் பத்துப் பேராவது வந்து கேட்பார்களா!

இதிலிருந்து அரசாங்கத்தார் ரேடியோ நிலையம் நடத்துவதின் நோக்கம் முற்றும் மாறானது என்று ஏற்படுகிறது.

ஜனங்களுக்கு உபயோகமான விஷயங்களைப் போதிக்க வேண்டும், உயர்ந்த விஷயங்களில் ஜனங்களுக்கு ருசியை உண்டாக்க வேண்டும் என்பது தான் ரேடியோ நிலையத்தின் ஆரம்ப இலட்சியமாகும். அதனாலேயே, ரேடியோ நிலை யங்களில் ஹார்மோனியத்தை உபயோகிக்கக் கூடாது என்றும் திட்டமிட்டார்கள்.

ஆகையால் "ஜனங்கள் விரும்புகிறார்கள்" என்றோ, "ரஸிகர்கள் கேட்கிறார்கள்" என்றோ காரணம் சொல்லி, மட்டரகமான ஸினிமா டப்பா சங்கீதத்தை ரேடியோவில் ஓயாமல் ஒலிபரப்புவது பெருங் குற்றமாகும்.

படாதிபதிகளும் அவர்கள் தூண்டிவிட்டுக் கிளர்ச்சி செய்பவர்களும் கூறும் காரணங்கள் சிறிதும் பொருத்தமற்றவை.

* * *

ஆனாலும் படாதிபதிகளுக்கும் சரி, டப்பா சங் கீத ரஸிகர்களுக்கும் சரி, ஒரு ஆறுதல் கூற விரும்புகிறோம்.

ஸ்ரீ கேஸ்கர் ஸினிமா-ரேடியோ இலாகாக்களின் மந்திரி பதவிக்குப் புதிதாக வந்திருக்கிறார். வந்த புதிதில் மந்திரிகள் இப்படித்தான் ஏதாவது தீவிர மாகப் பேசுவது வழக்கம். "அதைச் சீர்திருத்தப் போகிறேன்; இதை முன்னுக்குக் கொண்டுவரப் போகிறேன்" என்று தடபுடலாகப் பேசுவார்கள்.

ஸ்ரீ திவாகர் மேற்படி இலாகாக்களின் மந்திரி யாக வந்த புதிதில் இப்படித்தான் பேசினார். புது டில்லி ரேடியோ நிலையத்தில் நாகரிக அரைக் கைச் சட்டை அணிந்து அங்குமிங்கும் உலாவும் அழகுப் போட்டி அதிகார வர்க்கத்தார் ஸ்ரீ திவாகரின் சீர்திருத்த ஆவேசத்தை யெல்லாம் விழுங்கி ஏப்பம் விட்டார்கள். கடைசியில், ஸ்ரீ திவாகர் ஒரு மாகாணத்தின் கவர்னர் பதவி கிடைத்ததும் "அப்பா! பிழைத்தேன்!" என்று போய் ஆசுவாசமா யிருந்து வருகிறார்.

ஸ்ரீ கேஸ்கரின் சீர்திருத்த ஆவேசமும் விரைவில் இந்தக் கதியைத்தான் அடையும். ரேடியோ நிலையங்கள் எப்போதும் போலத்தான் நடந்து வரும். டப்பா ஸினிமா சங்கீதம் அமோகமாக வளரும். ஆகையால் "அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்ப தில்லையே!" என்ற உறுதியுடன், படாதிபதிகளும் டப்பா சங்கீத ரஸிகர்களும் நிம்மதியாக வேறு வேலைகளைக் கவனிக்கலாம்.

## மூன்று பாதிரிமாரின் அறிக்கை

இலங்கையில் பிறந்து வளர்ந்து இலங்கை வாசிகளாகிவிட்ட இந்தியர்கள் ஏழரைக் கோடிப் பேரின் ஜீவாதார உரிமை இலங்கை சர்க்காரால் அபகரிக்கப்பட்டு விட்டது. அவ்விதம் பறிபோன உரிமையைத் திரும்பப் பெறுவதற்காக இலங்கை இந்தியத் தலைவர்கள் சாத்வீக முறையில் சத்தி யாக்கிரகம் செய்து வருகிறார்கள் அல்லவா! மேற்படி சத்தியப் போர் ஆரம்பமாகி மூன்று மாதங்கள் சென்று விட்டன. இலங்கை இந்தியத் தலைவர்களில் தொண்ணூறு பேர் இலங்கைப் பிரதமர் காரியாலயத்தின் தாழ்வாரையில் உட் கார்ந்து ஐந்து நாட்கள் உண்ணாவிரதம் இருந்து தங்களுடைய தவத்தை நிறைவேற்றியுள்ளனர். இவர்களுடைய சாத்வீகத் தவம் காரணமாக இந்தியப் பொது மக்களின் கவனம் இலங்கையின் பால் திரும்பி யிருக்கிறது.

இந் நிலைமையில் இலங்கையில் உள்ள மூன்று பிரபல பாதிரிமார்கள் இலங்கை இந்தியர் பிரச்னை யைப் பரிசீலனை செய்து வெளியிட்டுள்ள அறிக்கை மிகவும் வரவேற்கத் தக்கதாகும். அங்கு ஏற்பட்டுள்ள நிலைமையை ரவரண்ட் டபிள்யூ. எம். பி. ஜயதுங்கா, ரவரண்ட் ஸி. எச். ரத்னகா, ரவரண்ட் எரிக் எல். ரபின்சன் இந்த மூவரும் உலகத்துக்குத் தெளிவாக எடுத்துக் கூறியிருக் கிறார்கள். நீதியும் நியாயமும் யார் பக்கம் இருக் கின்றன என்பதையும் அவர்கள் புள்ளி விவரங் களுடன் கட்டிக் காட்டியிருக்கிறார்கள்.

"இந்தியப் பிரஜா உரிமைச் சட்டத்தை இலங்கை இந்தியர்கள் பகிஷ்காரம் செய்திருந் தார்கள். அதன் காரணமாக அவர்கள் இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொள்ளும் சந்தர்ப் பத்தை இழந்து விட்டார்கள்" என்று பிரதமர் டட்லி சேனநாயகா உள்பட இலங்கை மந்திரிகள் அடிக்கடி குற்றம் சாட்டுகிறார்கள் அல்லவா!

அந்தக் கூற்றுக்குப் பாதிரிமார்கள் அளித் துள்ள பதிலைப் பாருங்கள்:

"1949-ம் வருஷம் நவம்பர் மாதத்திலிருந்து 1950 ஜூன் மாதம் வரையில், அதாவது ஏழு மாத காலத்துக்குத் தான் இலங்கை இந்தியர்கள் பிரஜா உரிமைச் சட்டத்தைப் பகிஷ்காரம் செய்திருந் தார்கள். ஆனால் மேற்படி பகிஷ்காரத்தில் கலந்து கொள்ளாத பலர் அப்போதே பிரஜா உரிமைக்காக விண்ணப்பம் செய்து கொண்டார்கள். அத்தகை யோருடைய விண்ணப்பங்கள் கூட இன்னும் பரிசீலனை செய்யப்பட வில்லையே, ஏன்? பகிஷ் காரம் ரத்து செய்யப்பட்ட பின், பிரஜா உரிமைக் காக விண்ணப்பம் செய்து கொள்ள இந்தியர் களுக்குப் பதினேழு மாத காலம் அவகாசம் இருந் திருக்கிறது. அந்தக் கெடுவுக்குள் 2,27,000 இந்தி யர்கள் பிரஜா உரிமை கோரி விண்ணப்பம் செய்து கொண்டுள்ளனர். அந்த விண்ணப்பங்களும் பரி சீலனை செய்யப்படவில்லை" என்று இலங்கைப் பாதிரிமார்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

எனவே இந்தியர்கள் வாக்காளர்களாகப் பதிவு செய்யப்படாததற்குப் பகிஷ்காரம் தான் காரணம் என்று கூறுவது, நொண்டிக் குதிரைக்குச் சறுக் கினது சாக்கு என்பதற்கு ஒப்பாக இருக்கிறது.

இந்தியர் பிரஜா உரிமைச் சட்டத்தில் உள்ள மற்றும் பல அநீதிகளையும் பாதிரிமார்கள் எடுத்துக் காட்டியிருக்கின்றனர். உதாரணமாக, பிரஜா உரிமை பெற விரும்பும் இலங்கை இந்தியர்களுக்குத் தங்களுடைய பாட்டனும் முப்பாட்டனும் இலங்கையில் பிறந்தார்கள் என்று நிரூபிப்பது முற்றிலும் அசாத்தியமான காரியம். இலங்கையிலேயே பரம்பரையாக வாழும் சிங்களவர்கள்கூட அவ்வாறு நிரூபிக்க முடியாது.

அடர்ந்த காடாகவும் மண் மேடாகவும் கிடந்த இலங்கையைப் பண்படுத்திப் பொன் விளையும் பூமியாகச் செய்தவர்கள் இந்தியர்கள் தான் என்பது எல்லோரும் அறிந்த விஷயம். ஆனால் இலங்கை இந்தியர்களின் உழைப்பு பழங் கதையாகி விடவில்லை என்பதும் பாதிரிமார்களின் அறிக்கையிலிருந்து பட்டவர்த்தனமாகத் தெரிகிறது.

“இலங்கையின் பொருளாதார சுபிட்சத்துக்கு இந்தியர்கள் செய்து வரும் அற்புதமான தொண்டை நாம் எக்காலத்திலும் மறக்க முடியாது. இன்று கூட இந்த நாட்டின் வருமானத்தில் அறுபத்தைந்து சதவீதம் இந்தியர்களுடைய உழைப்பினால்தான் கிடைக்கிறது. எனவே பிரஜா உரிமை பெறுவதற்குத் தேசத் தொண்டை அடிப்படையாகக் கருதும் பட்சத்தில் அதற்கு முற்றிலும் தகுதி வாய்ந்தவர்கள் இந்தியர்களே.”

இவ்விதம் தர்ம நியாயத்தை எடுத்துக் கூறியுள்ள இலங்கைப் பாதிரிமார்கள், இலங்கை இந்தியர்களின் சத்தியாக்கிரகப் போரையும் வெகுவாகப் பாராட்டியிருக்கிறார்கள். அரசியல் நீதியையும் ஜனநாயக தர்மத்தையும் அடிப்படையாகக் கொண்டு பிரஜா உரிமைச் சட்டத்தைத் திருத்த வேண்டும் என்று வற்புறுத்தி யிருக்கிறார்கள்.

அரசியல் விருப்பு வெறுப்பற்ற, கட்சி மாச்சரியம் இல்லாத, மானிட தர்மத்தில் பற்றுதல் உள்ள பாதிரிமார்களின் யோசனை இலங்கை சர்க்காரின் செவிகளில் ஏறுமா!

* * *

மேற்கண்டதை நாம் எழுதிய பின்னர், இலங்கையிலிருந்து மேலும் ஒரு நல்ல செய்தி கிடைத்திருக்கிறது. பிரதமர் டட்லி சேனநாயக இன்னும் சில நிபந்தனைகளைத் தளர்த்த முன்வந்திருக்கிறார். இலங்கையில் சேர்ந்தாற்போல் வாசம் செய்ததற்கு தஸ்தவேஜு மூலமான ருஜு வேண்டியதில்லை யென்றும், விண்ணப்பதாரின் வாக்கு மூலமே போதுமென்றும் சொல்லியிருக்கிறார். இவ்வாறே பாக்கியுள்ள மற்றத் தடைகளையும் நீக்கிவிட்டால், இலங்கை சர்க்காரின் மதிப்பு உயரும் என்பதில் சந்தேகமில்லை.

## தபால் இலாகாவின் பெரும் தவறு

சுதந்திர இந்தியாவில் இதற்கு முன் எத்தனையோ விதமான தபால் முத்திரைகள் (அதாவது ஸ்டாம்புகள்) வெளியாகியிருக்கின்றன. இப்போது கவிகளின் உருவம் தாங்கிய தபால் முத்திரைகளை வெளியிடப் போவதாக இந்திய சர்க்கார் தபால் தந்தி இலாகா அறிவித்திருக்கிறது.

கவிகளைக் கௌரவிப்பதைக் காட்டிலும் ஒரு நாட்டுக்குப் பெருமையைக் கொடுக்கக் கூடிய விஷயம் வேறு எதுவும் இல்லை. எனவே, பாரத நாட்டில் அவதரித்த கவிச் சிரேஷ்டர்களின் படங்களுடன் தபால் முத்திரைகளை வெளியிடுவது என்ற யோசனை மிகவும் பாராட்டுதற்கு உரியது.

முதலில் துளசிதாஸ், மீரா, சூர்தாஸ், கபீர், கலீப், தாகூர் முதலிய ஆறு கவிகளின் படங்களுடன் தபால் முத்திரைகளை வெளியிடப் போவதாக அறிவித்திருக்கின்றனர்.

இந்த ஜாபிதாவில் தென்னிந்தியக் கவிகளின் பெயர்கள் சேர்க்கப்படாதது மிகுந்த ஏமாற்றத்தைக் கொடுக்கிறது. விந்திய மலைக்குத் தெற்கேயும் மாபெரும் கவிச் சிரேஷ்டர்கள் இருந்திருக்கிறார்கள் என்ற விஷயம் தபால் இலாகா தலைமை அதிகாரிகளுக்குத் தெரியாமல் இருக்க முடியாது. திருவள்ளுவர், கம்பர், சுப்பிரமணிய பாரதியார் போன்ற மகா கவிகளின் உருவங்கள் முதல் ஜாபிதாவிலேயே சேர்க்கப்படாதது பெரும் தவறு.

மற்றக் கவிகளின் உருவங்களைத் தபால் முத்திரைகளில் வெளியிடும் விஷயம் பின்னால் கவனிக்கப்படும் என்று அதிகாரிகள் கூறியுள்ள அர்த்தமற்ற சமாதானம் ஒப்புக்கொள்ளத் தக்கதல்ல.

மேற்படி தவறைத் தபால் இலாகா உடனே திருத்திக் கொள்ள வேண்டியது அவசியம். சிறிது காலத்துக்குத் தள்ளி வைத்தாவது, முதல் முறையிலேயே தென்னிந்தியக் கவிகளில் சிலரின் உருவத்தையும் சேர்த்துத் தபால் முத்திரைகளை வெளியிடுவதுதான் நியாயமாகும்.

### அட்டைப்பட விளக்கம்

—அக்காவைக் கண்டதும் எப்போதும் தாவி வரும் அந்தக் குழந்தை இன்று அவள் “வா, வா” என்று அழைத்தும், வரமாட்டேன் என்கிறானே! ஏன்! அவளைப் பார்ப்பதாகக் கூடத் தெரியவில்லையே! வேறு எங்கேயோ அல்லவா பார்த்துக் கொண்டிருக்கிறான்! எதையோ அல்லவா வா, வா என்று கூப்பிடுகிறான்.

அவன் கூப்பிடுவது வேறு யாரையுமல்ல — அன்று மாலை கிழக்கே உதித்திருக்கும் பூரண சந்திரனைத்தான்! வட்ட வடிவமான சந்திரனைக் கண்டு குதூகலம் அடையாத குழந்தையு முண்டோ! அதோ, அந்தக் குழந்தை மழலை மொழியில் பாடும் பாட்டையும் சற்றுக் கேளுங்கள்:

நிலா நிலா வா வா!
நில்லாமல் ஓடி வா!
மலைமேலே ஏறி வா!
மல்லிகைப் பூ கொண்டு வா!

தன் குழந்தையின் இந்த மழலையைக் கேட்டுச் சுவர்க்க லோகத்து இன்பத்தை நுகராத தாயுமுண்டோ! அந்தத் தாயின் உள்ளத்தில் அலை மோதும் ஆனந்த வாரிதியின் காட்சியை அவள் இதழ்களில் தவழும் அந்த ‘உள் நிறைந்த சிரிப்பு’ நமக்குக் காட்டி விடுகிறதே!

# பொன்னியின் செல்வன்

## கல்கி

### அத்தியாயம் 40

### ஆனைமங்கலம்

நம் கதாநாயகிகளில் ஒருத்தியான வானதி அடிக்கடி நினைவு இழக்கும் வழக்கம் வைத்துக் கொண்டிருக்கிறாள் அல்லவா? இந்த ஒரு தடவை மட்டும் நேயர்கள் அதைப் பொறுக்கும்படி வேண்டுகிறோம். ஏனெனில், அவளுடைய நோய் நீங்கும் காலம் நெருங்கி விட்டது.

வானதிக்கு நினைவு சிறிது வந்தபோது முதலில் அவள் ஊசலாடுவது போலத் தோன்றியது. பின்னர் அவள் தான் வான வெளியில் பிரயாணம் செய்து கொண்டிருப்பதாக எண்ணினாள். "ரிம் ரிம்" "ஜிம் ஜிம்" என்று மழைத் தூற்றலின் சத்தம் கேட்டது. குளிர்ந்த காற்று குப் குப் என்று உடம்பின்மீது வீசிற்று. அதனால் தேகம் சிலிர்த்தது. சரி, சரி, மேக மண்டலங்களின் வழியாக வானுலகிற்குப் போய்க் கொண்டிருக்கிறோம் என்று எண்ணினாள். சுற்றிலும் இருள் சூழ்ந்திருந்தது. இடையிடையே மின்னல் வெளிச்சம் பளிச்சிட்டு மறைந்தது.

முதன் மந்திரி கடைசியாகக் கஜேந்திர மோட்சத்தைப் பற்றிக் கூறியதும், யானை அதன் துதிக்கையினால் தன்னைச் சுற்றி வளைத்துத் தூக்கியதும் இலேசாக நினைவு வந்தன. முதன் மந்திரி அநிருத்தர் கூறியபடியே நடந்து விட்டது. மண்ணுலகில் என் ஆயுள் முடிந்து இப்போது மோட்சத்துக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். மோட்ச உலகில் தேவர்களையும் தேவிகளையும் பார்ப்பேன்.

ஆனால் எல்லாத் தேவர்களிலும் என் மனதுக்குகந்த தெய்வமாகிய அவரை அங்கே நான் பார்க்கமுடியாது. மனதுக்கு இன்பமில்லாத அத்தகைய மோட்ச உலகத்துக்குப் போவதில் என்ன பயன்?

அடேடே! இது என்ன ஊசலாட்டம்! உடம்பை இப்படித் தூக்கித் தூக்கிப் போடுகிறதே! ஆனால் தலை வைத்திருக்கும் இடம் மெத்தென்று சுகமாயிருக்கிறது. தாயின் மடியைப்போல் இருக்கிறது. ஏன்? தாயைக் காட்டிலும் என்னிடம் பிரியம் வாய்ந்த இளைய பிராட்டியின் மடியைப் போலவும் இருக்கிறது!...ஆ! குந்தவைதேவி இப்போது பழையாறையில் என்ன செய்து கொண்டிருக்கிறாரோ? என்னைப் பற்றிய செய்தி அவருக்கு இதற்குள் எட்டியிருக்குமா?

மோட்ச உலகத்துக்கு வான வெளியில் மேக மண்டலங்களின் வழியாகப் பிரயாணம் செய்வது சரிதான். ஆனால் என்ன வாகனத்தில் பிரயாணம் செய்கிறேன்? சொர்க்க லோகத்துப் புஷ்பக விமானமா இது? அல்லது தேவேந்திரனுடைய ஐராவதம் என்ற யானையா? அப்பா! யானை என்றாலே சிறிது பயமாகத்தானிருக்கிறது! யானையும் அதன் துவண்டு வளையும் துதிக்கையும்!—அப்படித் துவளும் துதிக்கையில்தான் எவ்வளவு பலம் அதற்கு?—போனது போயிற்று! இனி அதைப் பற்றிப் பயம் என்ன? கவலை என்ன?

ஆனால் தலை வைத்திருக்கும் இடம் இவ்வளவு பட்டுப்போல் மிருதுவாயிருக்கும் காரணம் யாது? சுற்றிலும் இருளாயிருப்பதால் ஒன்றும் தெரியவில்லை. கையினால் துளாவிப் பார்க்கலாம். உண்மையில், பட்டுத் திரைச் சீலைமாதிரிதான் தோன்றுகிறது. கொஞ்சம் ஈரமாயும் இருக்கிறது.

ஆகா! இது என்ன? என் கன்னங்களை யார் தொடுகிறது? மல்லிகைப் பூவைப் போன்ற மிருதுவான கரம் அல்லவா தொடுகிறது?

"வானதி! வானதி!"

இளைய பிராட்டி குந்தவை தேவியின் குரல் அல்லவா இது? என்ன விந்தை! இப்படியும் இருக்க முடியுமா? அக்காவும் ஒருவேளை என்னுடன் சொர்க்கத்துக்கு வருகிறார்களா?

"வானதி! வானதி!"

"அக்கா! நீங்கள்தானா?"

"நான்தான்! வேறு யார்?"

"நீங்கள்கூட என்னுடன் மோட்ச உலகத்துக்கு வருகிறீர்களா?"

"மோட்ச உலகத்துக்குப் போக அதற்குள் உனக்கு என்னடி அவசரம்? இந்த உலகம் அதற்குள்ளே வெறுத்துப் போய் விட்டதா?"

"பின்னே, நாம் எங்கே போகிறோம்?"

"என்னடி? அது கூட மறந்து போய் விட்டதா? ஆனைமங்கலத்துக்குப் போகிறோம் என்று தெரியாதா?"

"என்ன ஊர்? இன்னொரு தடவை சொல்லுங்கள்!"

"சரியாப் போச்சு! ஆனைமங்கலத்துக்குப் போகிறோம்! ஆனையின் முதுகில் ஏறிக்கொண்டு போகிறோம்!"

"ஐயோ! யானையா?"

"அடி பைத்தியமே! உன் உடம்பு ஏனடி நடுங்குகிறது! யானை என்ற பெயரைக் கேட்டாலே பயப்படத் தொடங்கி விட்டாயா?"

"அக்கா! சற்று முன் நான் தூங்கிப் போய் விட்டேனா?"

"ஆமாம், ஆமாம்! யானைமேல் அம்பாரியில் பிரயாணம் செய்கிற சொகுஸில் ஆனந்தமாய்த் தூங்கி விட்டாய்!"

"ஆனந்தம் ஒன்றுமில்லை, அக்கா! பயங்கரமான கனவுகள் கண்டேன்!"

"அப்படித்தான் தோன்றியது! ஏதேதோ பிதற்றினாய்!"

"என்ன அக்கா பிதற்றினேன்?"

"காளாமுகர் என்றாய்! பலி என்றாய்! கஜேந்திர மோட்சம் என்றாய்! யானைத் துதிக்கை என்றாய்! அப்புறம் முதன் மந்திரி அநிருத்தரைப் 'பாவி, பழிகாரன்' என்று திட்டினாய். அந்தப் பிரம்மராயருக்கு நன்றாய் வேண்டும்! நீ தூக்கத்தில் அவரைப்பற்றித் திட்டியதையெல்லாம் அவர் கேட்டிருந்தால், பல நாள் தூங்கவே மாட்டார்!"

"அதெல்லாம் நடந்தது நிஜமாகக் கனவுதானா, அக்கா!"

"நிஜமாகக் கனவா? பொய்யாகக் கனவா? எனக்கு என்ன தெரியும்? நீ என்ன சொப்பனம் கண்டாய் என்பதே எனக்குத் தெரியாது."

"காளாமுகர்கள் என்னைப் பிடித்துக் கொண்டு போனார்கள். முதன் மந்திரி என்னிடம் இளவரசரைப் பற்றி இரகசியத்தைக் கேட்டார். நான் சொல்ல மறுத்து விட்டேன். உடனே யானையை அழைத்து என்னைத் தூக்கி எறிந்து கொல்லும்படி கட்டளையிட்டார். அப்போது நான் கொஞ்சங் கூடக் கலங்காமல் தைரியமாக இருந்தேன், அக்கா! அப்போது உங்கள் ஞாபகமும் வந்தது. நீங்கள் அங்கே இல்லையே, என்னுடைய தைரியத்தைப் பார்ப்பதற்கு என்று."

"போகட்டும்; சொப்பனத்திலாவது அவ்வளவு தைரியமாக நடந்து கொண்டாயே? அதன் பொருட்டுச் சந்தோஷம்!"

வானதி சற்றுச் சும்மா இருந்து விட்டு "என்னால் நம்ப முடியவில்லை!" என்றாள்.

"உன்னால் என்னத்தை நம்ப முடியவில்லையடி?"

"நான் கண்டதெல்லாம் கனவு என்று நம்ப முடியவில்லை."

"சில சமயம் சொப்பனங்கள் அப்படித்தான் இருக்கும். நிஜமாக நடந்தது போலவே தோன்றும். நான்கூட அப்படிப்பட்ட சொப்பனங்கள் பல முறை கண்டிருக்கிறேன்."

"அப்படி என்ன சொப்பனம் கண்டிருக்கிறீர்கள்? சொல்லுங்களேன்?"

"ஏன்? என் தம்பிகூடத்தான் அடிக்கடி என் கனவில் வருகிறான். இலங்கைக்கு அவன் போய் எத்தனை மாதம் ஆயிற்று? ஆனால் இரவில் கண்ணை மூடினால் அவன் தத்ரூபமாக என் முன்னால் வந்து நிற்கிறான்......"

"நீங்கள் அதிர்ஷ்டசாலி, அக்கா!"

"என் அதிர்ஷ்டத்தை நீதான் மெச்சிக் கொள்ள வேண்டும். அவன் கடலில் குதித்த செய்தி வந்ததிலிருந்து என் மனம் எப்படித் துடித்துக் கொண்டிருக்கிறது என்று உனக்குத் தெரியாது."

"அப்படியானால் அதுவும் ஒரு பயங்கர சொப்பனம் அல்லவா? அவர் கடலில் மூழ்கியது மட்டும் நிஜமான செய்திதானா?"

"அதுவும் ஒரு துர்ச் சொப்பனமாயிருந்தால் எவ்வளவோ நன்றாயிருக்குமே? அது மட்டும் நிஜந்தானடி, வானதி! இளவரசன் கடலில் குதித்ததை நேரில் பார்த்தவர் வந்து சொன்னாரே! அதை நம்பாமல் என்ன செய்வது?"

"வாணர்குல வீரரைத்தானே சொல்கிறீர்கள்? அவரே இளவரசரைப்பற்றி வேறு ஏதோ சொல்லவில்லையா? ஓடக்காரப் பெண்ணைப் பற்றியும் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தைப் பற்றியும் ஏதோ சொல்லவில்லையா?"

"இதெல்லாம் உன் சொப்பனமாயிருக்க வேண்டும். ஆம், ஓடக்காரி பூங்குழலியைப் பற்றியும் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தைப் பற்றியும் நீ தூக்கத்தில் பிதற்றினாய்! புத்த பிக்ஷுணி ஆகப் போவதாகக்கூட உளறினாய்! அதற்குள் உனக்கு என்னடி இந்த உலக வாழ்க்கையின் மீது அவ்வளவு வெறுப்பு? எதற்காக நீ புத்த பிக்ஷுணி ஆக வேண்டும்!"

"அக்கா! என் மனது உங்களுக்குத் தெரியாதா? அவரைக் கடல் கொண்டு விட்டது என்று கேட்ட பிறகு எனக்கு இந்த உலகில் என்ன வாழ்வு வைத்திருக்கிறது? சொப்பனத்தில் கண்டபடியே யானை என்னைத் துதிக்கையால் தூக்கி எறிந்து கொன்றிருக்கக் கூடாதா என்று தோன்றுகிறது!"

"அடி பாவி! நீயும் போய்விட்டால் என் கதி என்னடி ஆகிறது?"

"உங்கள் விஷயம் வேறு, அக்கா! நீங்கள்......"

"ஆமாம், ஆமாம்! அருள்மொழியிடம் என்னைக் காட்டிலும் உனக்கு அதிக ஆசை! இல்லையா?"

"அக்கா! அப்படி ஒன்றும் நான் சொல்லவில்லை. தங்களைப் போல் நான் மனோ தைரியம் உள்ளவள் அல்ல. அவர் இறந்துவிட்ட பிறகு......"

"சீச்சீ! என்ன வார்த்தை சொல்கிறாய்? அவன் 'இறந்தான்'






என்று நீ ஏன் சொல்ல வேண்டும்? உனக்கு நிச்சயமாய்த் தெரியுமா? பழுவேட்டரையர்களும், பழுவூர் ராணியும், பேதை மதுராந்தகனும் அப்படிச் சொல்லிக் கொம்மாளம் அடிப்பார்கள். நீயும் நானும் அப்படி ஏன் சொல்ல வேண்டும்? அல்லது ஏன் நினைக்கத்தான் வேண்டும்?"

"பின்னே, என்ன சொல்கிறீர்கள்? அவர் சுழிக் காற்றில் கடலிலே குதித்த பிறகு......வேறு என்ன ஆகியிருக்க முடியும்? பிழைத்திருந்தால் இத்தனை நாள் வந்திருக்க மாட்டாரா?"

"அடி பைத்தியமே! கடலில் குதித்தால், அவனைக் கடல் கொண்டு விட்டது என்று அர்த்தமா?"

"கரை ஏறியிருந்தால் இத்தனை நாள் தெரியாமலா இருக்கும்?"

"என் தகப்பனாரின் கதை உனக்குத் தெரியுமா? அவர் இளம் பிராயத்தில் பல மாத காலம் இருக்குமிடமே தெரியாமலிருந்தது. தேடிப் பிடித்துக் கொண்டுவந்து இளவரசுப் பட்டம் கட்டினார்கள். என் பாட்டனார் அரிஞ்சய சோழர் தக்கோலம் யுத்தத்துக்குப் பிறகு அடியோடு மறைந்து விட்டார். பல வருஷங்களுக்குப் பிறகு தான் அவர் இருக்குமிடம் தெரிந்தது. நான் சொல்கிறேன், கேள், வானதி! காவேரித்தாய் ஒரு சமயம் என் தம்பியைக் காப்பாற்றிக் கரை சேர்த்தாள். அதுமாதிரியே சமுத்திர ராஜனும் பொன்னியின் செல்வனைக் கரை சேர்த்திருப்பார். நமது கடற்கரைக்கும் இலங்கைத் தீவுக்கும் மத்தியில் எத்தனையோ சிறிய சிறிய தீவுகள் இருக்கின்றன. அத்தீவுகளில் ஒன்றில் அருள்மொழி ஒதுங்கியிருக்கக் கூடும் அல்லவா? அவனைத் தேடும் வேலையை நன்றாய்ச் செய்யும்படி தூண்டுவதற்காகவே நான் இந்தப் பிரயாணம் புறப்பட்டேன், உன்னையும் அழைத்துக் கொண்டு. உனக்கு இதெல்லாம் ஞாபகமே இல்லை போலிருக்கிறது. உன் பேரில் தப்பு இல்லை. இளவரசனைப் பற்றிய செய்தி வந்ததிலிருந்து உன் புத்தியே பேதலித்து விட்டது. இப்போதுதான் கொஞ்சம் தெளிவாகப் பேச ஆரம்பித்திருக்கிறாய்!"

வானதி சிறிது நேரம் மௌனமாயிருந்துவிட்டு, "அக்கா! நாம் எந்த ஊருக்குப் போகிறோம் என்று சொன்னீர்கள்!" என்றாள்.

"ஆனை மங்கலத்துக்கு."

"அது எங்கே இருக்கிறது?"

"நாகைப் பட்டினத்துக்கு அருகில் கடற்கரை ஓரத்தில் இருக்கிறது. நீ ஏதோ சொப்பனம் கண்டு உளறுகிறாயே? அந்தச் சூடாமணி விஹாரத்துக்கும் ஆனைமங்கலத்துக்கும் கொஞ்ச தூரந்தான். நீ புத்த பிக்ஷுணியாவதாயிருந்தால் கூட, அதற்கும் சௌகரியமாகவேயிருக்கும். ஆனால் நீ மணிமேகலையாவதற்கு அவசரப்பட வேண்டாம். பொன்னியின் செல்வனைப் பற்றித் திடமான செய்தி கிடைத்த பிறகு முடிவு செய்து கொள்ளலாம்!" என்று குந்தவை கூறிவிட்டு இலேசாகச் சிரித்தாள்.

"அக்கா! இது என்ன நீங்கள் சிரிக்கிறீர்கள்! சிரிப்பதற்கு எப்படி உங்களுக்கு மனம் வருகிறது? இளவரசர் பிழைத்திருப்பார் என்று உங்களுக்கு அவ்வளவு நம்பிக்கை இருக்கிறதா?"

"நம்பிக்கை இல்லாவிட்டால், நான் இப்படி இருப்பேனா வானதி! நான் பார்த்து வைத்திருக்கும் ஜோசியங்கள் எல்லாம் பொய்யாகப் போவதில்லை. என் தம்பியின் கையில் உள்ள சங்கு சக்கர ரேகைகளும் பொய்யாகப் போவதில்லை. இது வரையில் எல்லாம் சரியாகத்தான் நடந்து வந்திருக்கிறது."

"என்ன சரியாக நடந்து வந்திருக்கிறது? எனக்கு ஒன்றும் தெரியவில்லையே?" என்றாள் வானதி.

"உனக்கு ஏன் தெரியப் போகிறது? நீதான் சித்தப் பிரமை பிடித்து அலைகிறாயே? அருள்மொழிக்கு இளம் வயதில் பல கண்டங்கள் நேரும் என்று சொன்னார்கள். அதன்படி நேர்ந்து வந்திருக்கின்றன. பின்னே, மற்றவையும் நடந்துதானே ஆக வேண்டும்?"

"மற்றவை என்றால்?"

"எத்தனையோ தடவை நான் சொல்லியாகி விட்டது. நீயும் கேட்டிருக்கிறாய். மறுபடியும் எதற்காகச் சொல்லச் சொல்கிறாய்? பேசாமல் தூங்கு! பொழுது விடிந்து பார்த்துக் கொள்ளலாம்."

வானதி மீண்டும் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்து விட்டு, "இராத்திரியெல்லாம் யானை மீது பிரயாணம் செய்யப் போகிறோமா, அக்கா! எதற்காக?" என்று கேட்டாள்.

"அது கூடவா உனக்கு ஞாபகம் இல்லை? பகலில் நாம் பிரயாணம் செய்தால் வழியில் உள்ள ஊர்களிலெல்லாம் ஜனங்கள் நம்மைச் சூழ்ந்து கொள்வார்கள். 'பொன்னியின் செல்வன் எங்கே?' 'சோழ நாட்டின் தவப் புதல்வன் எங்கே?' என்று கேட்பார்கள். பழுவேட்டரையர் மீது குற்றம் சுமத்துவார்கள். பழுவூர் இளைய ராணியைச் சபிப்பார்கள். சக்கரவர்த்தியைக் கூட நிந்தித்தாலும் நிந்திப்பார்கள். அதையெல்லாம் நாம் எதற்காகக் காதினால் கேட்க வேண்டும்? நான்தான் ஜனங்களை அப்படியெல்லாம் தூண்டி விட்டதாகப் பழுவேட்டரையர்கள் சொன்னாலும் சொல்லுவார்கள். எதற்காக அந்த வம்பு என்றுதான் இராத்திரியில் புறப்பட்டேன். இதையெல்லாம் பழையாறையிலிருந்து புறப்படும் போதே உனக்குச் சொன்னேன். மறுபடியும் கேட்கிறாய். நல்ல சித்தப் பிரமை பிடித்து உன்னை ஆட்டுகிறது! சூடாமணி விஹாரத்துப் புத்த பிக்ஷுக்களிடம் சொல்லித்தான் உன் சித்தப் பிரமையைப் போக்க வழி தேட வேண்டும்! போனால் போகட்டும்; நீ இப்போது தூங்கு! எனக்கும் தூக்கம் வருகிறது. இந்த ஆடும் குன்றின் மீது உட்கார்ந்தபடியேதான் இன்று இரவு நாம் தூங்கியாக வேண்டும்" என்றாள் இளையபிராட்டி.

வானதி இனி ஒன்றும் பேசக்கூடாது என்று தீர்மானித்து மௌனமானாள். அவளுடைய உள்ளம் ஒரே குழப்பமாயிருந்தது. அன்று நடந்ததையெல்லாம் ஒவ்வொன்றாக நினைத்துப் பார்த்துக் கொண்டாள். எல்லாம் உண்மையாக நிகழ்ந்த சம்பவங்களாகவே தோன்றியது. 'எனக்குச் சித்தப்பிரமை ஒன்றுமில்லை; அக்காதான் என்னைப் பைத்தியமாக அடிக்கப் பார்க்கிறாள்' என்று சில சமயம் எண்ணினாள். யானை தன்னைத் துதிக்கையினால் சுற்றித் தூக்கிய பிறகு என்ன நடந்தது என்பதை எண்ணி எண்ணிப் பார்த்தாள். ஒன்றும் நினைவுக்கு வரவில்லை. என்னதான் நடந்திருக்கும்? தன் உயிருக்கே ஆபத்தான அந்த வேளைக்கு அக்கா சரியாக அங்கே வந்து தன்னைக் காப்பாற்றியிருக்க வேண்டும். அக்காவைப் பார்த்ததும் முதன் மந்திரி நடு நடுங்கிப் போயிருக்கவேண்டும். ஆயினும் யானைத் துதிக்கையின் பிடியிலிருந்து காப்பாற்றுவது என்பது அவ்வளவு சுலபமான காரியமா?......ஒரு வேளை இவ்வாறு இருக்குமோ? ...... தன்னைத் துதிக்கையால் கட்டித் தூக்கிய யானைதானா இது? மேலே அம்பாரி இருந்தது அந்த இருட்

டியும் சிறிது தெரிந்தது. இளைய பிராட்டி அந்த அம்பாரியிலேயே இருந்திருக்கலாம். யானை துதிக்கையினால் தூக்கித் தன்னைத் தூர எறிவதற்குப் பதிலாக மேலே அம்பாரியில் விட்டிருக்கக்கூடும். அந்தமாதிரி செய்ய யானைகள் பழக்கப்பட்டிருப்பதை வானதி பல முறை பார்த்ததுண்டு. முதன் மந்திரியும் இளைய பிராட்டியும் சேர்ந்து இம் மாதிரி சூழ்ச்சி செய்திருக்கிறார்களோ? எதற்காக? நான் தனியாகப் பிரயாணம் செய்வதைத் தடுக்கும் பொருட்டுத்தான். என்னுடைய தைரியத்தைச் சோதிப்பதற்காகவும் இளையபிராட்டி இம்மாதிரி செய்திருக்கலாம். பொம்மை முதலையை என் அருகிலே விட்டு ஒரு சமயம் சோதனை செய்ய வில்லையா? எப்படியாவது இருக்கட்டும்; நான் இன்று தனி வழியே புறப்பட்டது பெருந் தவறு. இப்போது அக்காவின் மடியில் தலையை வைத்துப் படுத்திருப்பது எவ்வளவு நிம்மதியா யிருக்கிறது? அக்காவின் வார்த்தைகள் எவ்வளவு தைரியமும் உற்சாகமும் அளிக்கின்றன? பொன்னியின் செல்வர் எங்கேயோ பத்திரமா யிருக்கிறார் என்பதில் சந்தேகமில்லை. ஒரு வேளை இந்தப் பிரயாணத்தின் முடிவில் அவரைச் சந்திப்போமா?......இவ்வாறு எண்ணியபோது வானதியின் உள்ளத்தில் அளவிலாத கிளர்ச்சி ஏற்பட்டது. மனச் சோர்வுக்கு நேர்மாறான உற்சாக இயல்பு இப்போது அவளை ஆட்கொண்டது.

யானை கம்பீரமாக நடந்து சென்று கொண்டிருந்தது.

யானைமேல் அம்பாரி ஆடி அசைந்து கொண்டிருந்தது.

முன்னும் பின்னும் காவற்படைகள் போய்க் கொண்டிருந்தன.

மழை சிறு தூற்றலாயிற்று. பிறகு தூற்றலும் நின்றது.

வானத்தில் மேகக் கூட்டங்கள் சிதறிக் கலைந்தன.

நட்சத்திரங்கள் எட்டிப் பார்த்தன.

வானதி யானையின் அம்பாரிக் கூரை வழியாக மேலே வானத்தில் தெரிந்த நட்சத்திரங்களைப் பார்த்தாள்.

வான வெளியில் சஞ்சரிக்கும் நட்சத்திரங்களுக்கும் பூலோகத்தில் வாழும் மனிதர்களின் வாழ்க்கைக்கும் ஏதேனும் சம்பந்தம் இருக்க முடியுமா என்று அதிசயப் பட்டாள்.

பொன்னியின் செல்வர் உதித்த நட்சத்திரத்துக்கும் தான் பிறந்த நட்சத்திரத்துக்கும் உள்ள பொருத்தத்தைப் பற்றி ஜோதிடர்கள் சொல்வதில் ஏதேனும் உண்மை யிருக்குமா?

தன் வயிற்றில் பிறக்கும் மகன் மூன்று உலகத்தையும் ஆளப் போகிறான் என்று ஜோதிடர்களுடன் சேர்ந்து அக்காவும் சொல்வது உண்மையாகுமா?

வால் நட்சத்திரம் தோன்றுவது ஏதோ உற்பாதத்துக்கு அறிகுறி என்று ஜனங்கள் பேசிக் கொள்கிறார்களே, அது எவ்வளவு தூரம் நிஜமாயிருக்கும்?

அப்படி என்ன உற்பாதம் நடக்கும்?

பொன்னியின் செல்வர் கடலில் முழுகியது தான் அந்த உற்பாதமா?

அக்கா கொண்டுள்ள நம்பிக்கையின் படி அவர் திரும்பி வருவாரா?

அப்படியானால், வேறு என்ன உற்பாதம் நடக்கக் கூடும்?...

இம்மாதிரி யெல்லாம் வெகு நேரம் சிந்தனை செய்து கொண்டிருந்த பிறகு வானதி இலேசாகக் கண்ணயர்ந்தாள்.

அவள் கண் விழித்துப் பார்த்தபோது, பொழுது புலர்ந்திருந்தது.

புள்ளினங்கள் உதய கீதம் பாடின.

இளைய பிராட்டியும் விழித்துக் கொண்டிருந்தாள். அம்பாரியின் பட்டுத் திரையை விலக்கிக் கொண்டு வெளியே பார்த்து, "இதோ ஆனைமங்கலம் வந்து விட்டோம். சோழ மாளிகையின் வாசலுக்கே வந்து விட்டோம்" என்றாள்.

இரு இளவரசிகளும் யானை மீதிருந்து இறங்கினார்கள்.

மாளிகைக்குள்ளே பிரவேசித்தார்கள். அங்கே ஆயத்தமாயிருந்த அரண்மனைத் தாதிமார்கள் இளவரசிகள் இருவரையும் மாளிகையின் எல்லாப் பகுதிகளுக்கும் அழைத்துச் சென்று காட்டினார்கள்.

கடைசியில், மாளிகையின் கீழ்ப் புறத்துக்கு வந்து, அங்கிருந்த அலங்கார முன்றின் முகப்பில் நின்றபடி கடலுடன் கலந்த கால்வாயைப் பார்த்துக் கொண்டு நின்றார்கள்.

"அக்கா! இளவரசரைத் தேடுவதற்கு ஏற்பாடு செய்யப் போவதாகச் சொன்னீர்களே? என்ன செய்திருக்கிறீர்கள்?" என்றாள் கொடும்பாளூர் இளவரசி.

"ஆமடி வானதி! தேடுவதற்கு ஏற்பாடு ஆரம்பமாகி விட்டது. அதோ பார்

ஒரு படகு வருகிறது! அதில் வருகிற வர்கள் ஒரு வேளை ஏதேனும் செய்தி கொண்டு வந்தாலும் கொண்டு வரு வார்கள்!" என்றாள் குந்தவை.

வானதி திரும்பிப் பார்த்தாள். சற்றுத் தூரத்தில் மரக்கிளைகளின் இடைவெளி யில் ஒரு சிறிய படகு வருவது தெரிந் தது. அதில் இருவர் இருந்தார்கள்.

"அக்கா! அந்தப் படகில் வருவது யார்?" என்று வானதி கேட்டாள்.

"படகு தள்ளுகிறவன் சேந்தன் அமுதன். தஞ்சாவூர்ப் பாதாளச் சிறை யிலிருந்து நாம் அன்றொரு நாள் விடுதலை செய்தோமே, அவன்! உட்கார்ந்திருப் பவள் பூங்குழலி!"

வானதிக்கு உடம்பு சிலிர்த்தது.

"அக்கா! நான் அந்தப் பெண்ணைப் பார்க்க விரும்பவில்லை. உள்ளே போகி றேன்!" என்றாள்.

"என்னடி அவளைக் கண்டு அவ்வளவு பயம்! உன்னை அவள் விழுங்கி விடு வாளா, என்ன? நான் பார்த்துக் கொள் கிறேன். நீ பயப்படாமல் சும்மா இரு!" என்றாள் குந்தவை.

படகு நெருங்கி வந்துகொண்டிருந்தது.

* * *

**யானைத்** துதிக்கையில் அகப்பட்ட வானதி எப்படி உயிர் பிழைத்தாள்? இதைக் குறித்து அவள் இரண்டாவ தாகச் செய்த ஊகந்தான் சரியானது. யானை துதிக்கையைச் சுழற்றி அவளைத் தூர எறியவில்லை. மேலே தூக்கி அம் பாரியின் அருகில் இலேசாக வைத்தது. அங்கே திரை மறைவில் ஆயத்தமா யிருந்த குந்தவை அவளை வாரி அணைத்து மடியில் போட்டுக் கொண்டாள்.

பிறகு முதன் மந்திரியும் பல்லக்கில் ஏறினார். "தேவி! போய் வரட்டுமா? உன் பிரயாணம் இனிதாயிருக்கட்டும். அதன் முடிவும் இனிதாயிருக்கட்டும்!" என்று சொன்னார்.

"ஐயா! தங்கள் உதவிக்கு மிக்க நன்றி!" என்றாள் இளையபிராட்டி.

"கொடும்பாளூர்க் கோமகளைக் கோழை என்றாயே? அவளைப் போல் நெஞ்சழுத்தக்காரப் பெண்ணை நான் பார்த்ததே யில்லை."

"முன்னேயெல்லாம் அவள் கோழை யாகத்தானிருந்தாள். கொஞ்ச நாளாகத் தான் அவளுக்கு இவ்வளவு தைரியம் வந் திருக்கிறது" என்றாள் குந்தவை.

"எல்லாம் உன்னுடைய பயிற்சிதான். அந்தப் பெண் என்னைப் பயங்கர ராட்ச தன் என்று எண்ணி யிருப்பாள். போனால் போகட்டும். என்னைப் பற்றி எவ்வளவோ பேர் எத்தனையோ விதமாக எண்ணிக் கொண்டிருப்பார்கள். நான் அதற்காகவெல்லாம் கவலைப்படுவதில்லை. போய் வருகிறேன், அம்மா!"

இவ்விதம் முதன் மந்திரி கூறியதும் அவருடைய பல்லக்கும் நாலு வீரர்களும் மட்டும் மேற்குத் திசையில் செல்ல, யானை குதிரை பரிவாரங்கள் எல்லாம் கிழக்கு நோக்கிச் சென்றன.

* * *

**மு**தன் மந்திரியின் பல்லக்குப் புறப் பட்ட சிறிது நேரத்துக்கெல்லாம் மழை பிடித்துக் கொண்டது. மழையைப் பொருட்படுத்தாமல் சிவிகை தூக்கிய ஆட்களும் சிவிகையைக் காத்த வீரர் களும் சென்று கொண்டிருந்தார்கள்.

மழை குறைந்து தூற்றல் நிற்கும் சம யத்தில் திடீரென்று பல்லக்கு நின்றது.

"ஏன் நிற்கிறீர்கள்?" என்று முதன் மந்திரி கேட்டார்.

"சுவாமி! அந்த மரத்தடியில் யாரோ கிடப்பதுபோலத் தெரிந்தது!" என்றான் முன்னால் சென்ற காவலர்களில் ஒருவன்.

முதன் மந்திரி அவன் சுட்டிக் காட்டிய திசையை உற்றுப் பார்த்தார். பளிச் சென்று ஒரு மின்னல் மின்னியது.

"ஆமாம்; யாரோ கிடக்கிறதாகத் தான் தெரிகிறது. இறங்கிப் பார்க்கி றேன்" என்றார் முதன் மந்திரி.

சிவிகையிலிருந்து இறங்கி அருகில் சென்றபோது மரத்தடியில் கிடந்த மனி தன் முனகும் சத்தம் கேட்டது.

"யார் இங்கே?" என்றார் அநிருத்தர்.

அதற்குப் பதிலாக "முதன் மந்திரி போலிருக்கிறதே!" என்ற தீனமான குரல் கேட்டது.

"ஆம்; கேட்பது முதன் மந்திரிதான்! இங்கே கிடப்பது யார்?"

"ஐயா! தெரியவில்லையா? நான்தான் மதுராந்தகன்!"

"இளவரசே! இது என்ன கோலம்? இங்கே எப்படி வந்தீர்கள்? என்ன நேர்ந்தது?" என்று பரபரப்புடன் கேட் டுக் கொண்டே முதன் மந்திரி மதுராந்த கரைத் தூக்கி நிறுத்த முயன்றார்.



கோவாப்ரேட்டிவ் சப் ரிஜிஸ்டிராரும், தஞ்சை கூட்டுறவு மார்க்கெட்டிங் பெடரேஷன் காரிய தரிசியுமான திரு. S. P. இராமலிங்கம் பிள்ளை அவர்கள் குமாரத்தி செல்வி செண்பக வல்லிக்கும் மதுரை திரு. S. பாண்டியன் பிள்ளை அவர்கள் குமாரர் செல்வன் டாக்டர் S. P. சுப்பிரமணியம் B. A. B. V. Sc.,க்கும் திருவாரூர், விஜயபுரம் "ரிவர் வியூ" பங்களாவில் 6—7—52 ஞாயிறன்று விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. நண்பர்களும், உறவினர்களும் வாழ்த்துச் செய்திகள் அனுப்பி தம்பதிகளை ஆசீர்வதித்தனர். திருவாரூர் பிரமுகர்கள் விஜயம் செய்து தம்பதிகளை வாழ்த்தினுர்கள். திருமணத்தை யொட்டி அன்று மாலை வரவேற்பின் போது ஒரு இன்னிசை விருந்தும் அளிக்கப்பட்டது.

அருணாசலத்துக்கு ரொம்ப நாட்களாக வேலையில்லை. அது அவன் தவறல்ல; எந்த வேலைக்கும் அவன் போகத் தயாராயிருந்தான். யாரும் வேலை கொடுக்கா விட்டால் அவன் என்ன செய்வான்? எஸ். எஸ். எல். ஸி. பரீக்ஷையில் தேறிய தினத்திலிருந்து வேலை தேடிய வண்ணமா யிருந்தான். 'குமாஸ்தா தேவை' என்று பத்திரிகைகளில் வரும் விளம்பரங்களுக்கெல்லாம் அலுப்பு சலிப்பில்லாமல் மனு எழுதித் தள்ளினான்.

பிறகு கொஞ்ச நாளில் அருணாசலம் டைப் அடிக்கக் கற்றுக் கொண்டான். வெறும் குமாஸ்தா வேலையோடு இப்பொழுது டைப்பிஸ்டு வேலையையும் துருவ ஆரம்பித்தான்.

அருணாசலத்தின் முயற்சி வீண்போக வில்லை. ஒரு கம்பெனியில் டைப்பிஸ்டுகள் தேவை என்று பத்திரிகையில் விளம்பரம் வெளியாகி யிருந்தது.

வழக்கம்போல் அருணாசலம் கொஞ்சம் கூடத் தாமதம் செய்யாமல் அந்த வேலைக்கு மனு எழுதிப் போட்டான். மறு நாளே நேரில் வந்து மானேஜரைப் பேட்டி காணும்படி கடிதம் வந்தது.

அருணாசலத்துக்கு உண்டான சந்தோஷத்தை அளவிட்டுக் கூறமுடியாது. இத்தனை நாளாக அருணாசலம் எத்தனையோ உத்தியோகங்களுக்கு மனுப் போட்டுப் போட்டு அலுத்துப் போயிருந்தான். ஒரு கம்பெனியாவது ஆதரவான பதிலை எழுத வேண்டுமே! ஊஹூம். கிடையாது. "இப்போது வேலை எதுவும் காலியில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்" என்று சுருக்கமான பதில்தான் அவனுக்குக் கிடைப்பது வழக்கம். இல்லாவிட்டால், "உங்களுடைய மனுவை விரைவில் கவனித்து ஆதரவான பதிலை விரைவில் அனுப்பி வைக்கிறோம்" என்று பதில் கிடைக்கும். மாசக்கணக்காகக் காத்திருந்தாலும் பதில் என்னவோ கிடைக்காது.

இம்மாதிரியான பதில்களைப் பார்த்து அருணாசலம் ரொம்ப அலுத்துப் போயிருந்தான். ஆகவே இந்தப் பதில் அவனுக்குக் கொஞ்சம் உற்சாகம் தருவதாக இருந்தது.




புத்தம் புதிய 'பியூக் கார்' மாதிரி 'மழ மழ' வென்று தலையை வாரிக் கொண்டு ஜோராகப் புது மாப்பிள்ளை மாதிரி டிரஸ் செய்து கொண்டு புறப்பட்டான். குறித்த நேரத்துக்குச் சற்று முன்னதாகவே அந்தக் கம்பெனிக்குப் போய்ச் சேர்ந்தான்.

அங்கே ஏற்கெனவே ஏழெட்டுப் பேர் காத்துக் கொண்டிருந்தனர். அவர்களெல்லோரும் தன்னைப் போலவே 'இண்டர்வ்யூ'வுக்காக அழைக்கப் பட்டிருப்பவர்கள் என்று தெரிந்துகொண்ட அருணாசலத்துக்கு வெகு நேரம் பிடிக்கவில்லை.

சிறிது நேரத்துக்கெல்லாம் மானேஜர் ஒவ்வொருவராகப் பரீக்ஷை செய்



யப் போவதால் உள்ளே போகும்படி பியூன் வந்து சொன்னான். அங்கே வந்திருந்தவர்கள் எல்லோரும் ஒவ்வொருவராக மானேஜர் அறைக்குள் போனார்கள். மானேஜர் ஒவ்வொருவருக்கும் அரை மணி நேரத்துக்குக் குறையாமல் வேலை கொடுத்துப் பரீக்ஷை செய்து பார்த்தார். அருணாசலத்துக்கும் டைப் அடிப்பதற்கு விஷயம் கொடுத்தார். பிரசங்கம் மாதிரி சட சட வென்று பொழிந்து தள்ளினார். அருணாசலமும் தளராமல் பட பட வென்று அவற்றை யெல்லாம் டைப் அடித்துத் தள்ளினான்.

மானேஜர், பேட்டிக்கு வந்தவர்கள் டைப் அடித்த விஷயங்களை யெல்லாம் எடுத்து வைத்துக் கொண்டார்.

பிறகு, "சரி, நீங்களெல்லோரும் போகலாம். பரீக்ஷை முடிந்து விட்டது. இன்னும் ஒரு வாரத்தில் உங்கள் வீட்டு விலாசத்துக்குத் தகவல் அறிவிக்கப்படும். எங்களுக்கு இங்கே மூன்று டைப்பிஸ்டுகள் தேவை. உங்களுடைய வேலையின் தரத்தைப் பற்றி யோசனை செய்து அறிவிக்கிறேன்!" என்று கூறி அவர்களை யெல்லாம் அனுப்பி விட்டார்.

அருணாசலம் ஒரு வாரத்தை ஒரு யுகமாகக் கழித்தான். தினம் தபால் ஆபீஸிலேயே பழியாகக் கிடந்தான். அந்தக் கம்பெனியிலிருந்து ஒரு கடிதமும் வரவில்லை. மேலும் இரண்டு மூன்று நாள் பார்த்தும் பலன் இல்லை.

கடைசியில் அருணாசலம் பொறுமையிழந்து அந்தக் கம்பெனி மானேஜரையே பார்த்துக் கேட்டு விடுவது என்று தீர்மானித்து நேரே அங்கே போய்ச் சேர்ந்தான். ஆனால் அவனால் மானேஜரைப் பார்க்க முடியவில்லை.

அருணாசலம், அந்த ஆபீஸ் பியூனைப் பார்த்து, "ஏன் அப்பா, இங்கே புதிதாக டைப்பிஸ்டு யாரையாவது நியமித்திருக்கிறார்களா?" என்று கேட்டான்.

அதற்குப் பியூன் மிகவும் அலட்சியமாக "யாரையும் நியமிக்கவில்லைங்க. ஏன்? என்னத்துக்காகக் கேக்கிறீங்க?" என்று கேட்டான்.

"போன வாரம் உங்கள் மானேஜர் என்னையும் இன்னும் சிலரையும் டைப் அடிக்கச் சொல்லிப் பரீக்ஷை செய்தார். ஒரு வாரத்தில் தகவல் அனுப்புவதாகச் சொல்லி அனுப்பினார். ஒரு தகவலும் தெரியவில்லையே! அதற்காகக் கேட்டேன்" என்றான் அருணாசலம்.

"அவரு என்ன தகவல் கொடுப்பாருங்க? யாரையும் நியமிக்கிற வழக்கமே இந்த ஆபீஸிலே இல்லைங்க!" என்றான் பியூன்.

"அப்படி யென்றால் ஆபீஸ் வேலை எல்லாம் எப்படி நடக்கிறது?" என்று கேட்டான் அருணாசலம் ஆச்சரியத்தோடு.

"அது என்னங்க பிரமாதம்! உங்களைப் போல எத்தனையோ மகராசன் மாருங்க வேலை தேடிக்கிட்டு வராங்க. அவுங்களை வச்சிக்கிட்டே எங்க மானேஜர் ஐயா ஆபீஸ் வேலையைச் சுலபமாக முடித்து விடுவார். புதிதாக யாரையும் நியமிக்கிற வழக்கம் இல்லைங்க, இங்கே!" என்றான் பியூன்.

அதற்குமேல் அருணாசலத்துக்கு அங்கே என்ன வேலை?

## பிரபல திருமணம்

மாயவரம் கூறை நாடு பிரபல மிராசுதாரர்களான ஸ்ரீ கே. எஸ். வெங்கு செட்டியார், ஸ்ரீ கே. எஸ். ராமு செட்டியார் இவர்களின் சகோதரி சௌ. ருக்மிணிக்கும் குற்றாலம் ஸ்ரீ ஆர். சுந்தரேசன் செட்டியார் குமாரர் சிரஞ்சீவி எஸ். ஆறுமுகத்துக்கும் மாயவரம் கூறைநாடு 'கொட்டாச்சி ஹவுஸி'ல் இந்த மாதம் 9-உ வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்துக்குத் தமிழ் நாட்டிலுள்ள பிரபலஸ்தர்கள் பலர் விஜயம் செய்திருந்தனர். மாலையில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் இன்னிசை விருந்து நிகழ்ந்தது. தம்பதிகளுக்கு வாழ்த்துச் செய்திகளும் பரிசுகளும் வந்து குவிந்தன. வாழ்க மண மக்கள்!





பெங்களூர் ராஜா ஸ்னோ கம்பெனி புரொப்ரைட்டர் ஸ்ரீ V. R. சுப்ரமணிய முதலியார் அவர்களின் இளைய குமாரத்தி சௌபாக்கியவதி ஈஸ்வரிக்கும் பெங்களூர் ஸ்ரீ தேவராஜ முதலியார் அவர்களின் பேரன் சிரஞ்சீவி தக்ஷிணாமூர்த்திக்கும் 13 - 7 - 1952 அன்று பெங்களூரில் "ராஜா ஸ்னோ" கட்டிடத்தில் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. அன்று காலை முகூர்த்தத்திற்கும் மாலையில் நடந்த வரவேற்பின்போதும் நகரப் பிரமுகர்கள் வந்திருந்து திருமணத்தை சிறப்பித்தனர்.

வாழ்க ஈஸ்வரி - தக்ஷிணாமூர்த்தி !




ஆசிரியர்: பியர் பாய்லோ (பிரான்ஸ்) மொழிபெயர்ப்பு: வாஞ்சி

இன்னும் ஐந்து நிமிஷ நேரத்தில் பாங்கியை மூடி விடுவார்கள்; ஆனால் அப்போதுதான் டேனியல் பெஷின் தான் கொண்டு வந்த செக்கிற்குப் பணம் வாங்கிக் கொண்டான்.

அவன் வேண்டும் என்றேதான் அவ்வாறு செய்தான். அவன் மிகுந்த முன் ஜாக்கிரதையோடு தயாரித்திருந்த திட்டம் யாதொரு அசம்பாவிதமுமின்றி நிறைவேறி விட்டது!

அன்று வெள்ளிக் கிழமை. சனி, ஞாயிறு இரண்டு நாளும் பாங்கி மூடப்பட்டிருக்கும். எனவே அவனது திருட்டுத்தனத்தை இனி திங்கட்கிழமை காலை பத்துமணிக்கு முன் இந்த உலகத்தில் யாராலும் கண்டு பிடிக்க முடியப்போவதில்லை. அந்த இரண்டு தினங்களுக்குள் பறவை கூண்டிலிருந்து தப்பிப் பறந்தோடிவிடும்! அதாவது அவன் - பிரான்ஸ் எல்லையைக் கடந்து வெகு தூரம் சென்று விடுவான்.

திங்கட்கிழமை அவனது திருட்டை யார் வேண்டுமானாலும் கண்டு பிடித்துக் கொள்ளட்டும். யார் கண்டு பிடிக்கப் போகிறார்கள்! அவ்வளவு எளிதில் யாரும் கண்டு பிடித்து விடக்கூடிய விதத்தில் அவன் மடத்தனமாகவும் முன் யோசனையின்றியும் எதுவும் செய்து விடவில்லையே.

டேனியல் பெஷின் தன் கிழட்டுப் பெரிய தகப்பனான ஸ்டீபன் பெஷினைப் போல் டெலிபோனில் பேசவும் கையெழுத்துப் போடவும் எத்தனை மாதங்கள் கஷ்டப்பட்டான், தெரியுமா! அந்தக் கிழவரைப் போல அவன் அடிக்கடி நினைத்துக் கொண்டு கட்டைத் தொண்டையில் பேசியதை பாங்கி மானேஜர் அப்படியே நம்பிவிட்டார்! பெரிய தந்தையைப் போல் கையெழுத்திட்டு ஒரு கடிதத்தையும் அவன் பாங்கிக்கு எடுத்துக் கொண்டு சென்றிருந்தான்.

சிறிய தொகையாக இருந்தால் டெலிபோனில் பேசவும் வேண்டியதில்லை, கடிதமும் அனுப்ப வேண்டியதில்லை. பெரும் தொகை யல்லவா! ஆயிரம் அல்ல, பத்தாயிரமும் அல்ல; இருபது லட்சம் பிராங்க் அல்லவா!

டேனியல் திடீரென்று சட்டையைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். சட்டையின் உள் பையில் வைத்திருந்த கரன்ஸி நோட்டுக் கட்டுகள் அப்படியே இருந்தன. அதே சமயம் அவன் தன்னை யாராவது கவனிக்கிறார்களா அல்லது பின் தொடருகிறார்களா என்று கவனித்துப் பார்த்தான்.

டேனியல் அவனுடைய பெரிய தந்தை ஸ்டீபன் பெஷின் கம்பெனியில் வேலை பார்ப்பதால், அவனுக்கு எஜமானரும் அந்தக் கிழவர்தான்.

அந்தக் கிழவரைக் கண்டாலே டேனியலுக்குச் சிறிதும் பிடிக்காது. கிழவருக்கும் தன்னிடம் எள்ளளவும் அன்பு இல்லை என்பது அவனுக்குத் தெரியும். தன் தந்தை இறக்கும் தறுவாயில் தன்னை எந்தக் காலத்திலும் கை விட்டு விடக் கூடாது என்று ஸ்டீபன் பெஷினைக் கேட்டுக் கொண்டார். தன் இளைய சகோதரனிடம் கொடுத்த வாக்குறுதி மீறிவிடக் கூடாதே என்பதற்காக அந்தக் கிழவர் அவருடைய கம்பெனியில் தன்னை வேண்டா வெறுப்பாக வைத்துக் கொண்டிருக்கிறார் என்பதும் அவனுக்குத் தெரிந்த விஷயம்தான்.

டேனியல் மற்றொரு முன்னேற்பாடும் செய்திருந்தான். அதாவது கம்பெனியிலிருந்து மூன்று வாரம் லீவு எடுத்துக் கொண்டிருந்தான். எனவே மூன்று வாரம் வரையில் அவன்மீது அவனுடைய பெரிய தந்தைக்கு எவ்விதச் சந்தேகமும் ஏற்படப் போவதில்லை. அதன் பிறகுதான் ஏற்படும். அதற்காக அந்தக் கிழவர் வருத்தப்படப் போவதில்லை.

அவன் தானாக ஓடிவிட்டதால் தன்னை யாரும் குறை கூற மாட்டார்கள். தன் தலையில் சுமத்தப்பட்டிருந்த பளு தீர்ந்தது என்று கூட நினைத்துக் கொள்வார். ஆனால், இருபது லட்சம் பிராங்கை டேனியல் அடித்துக் கொண்டு போய்விட்டான் என்பது தெரிந்ததும் கிழவர் அடியாய்த் துடிப்பார். அவர் டேனியலை 'மடையன்' என்று கண்டித்தது உண்டு. 'மடையன்' செய்த அபார தந்திர வேலை அவருக்குத் தெரிந்ததும் அவர் என்ன பாடு படுவார்!

இதை நினைத்ததும் டேனியலுக்குச் சிரிப்புத் தாங்க முடியவில்லை. 'பாவம்! கிழவர்!' என்று மனதுக்குள் அனுதாபப்பட்டான்!

விஷயம் தெரிந்ததும் தன் பெரிய தந்தை திருடனுக்குத் தேள் கொட்டியது போல் மௌனமாக

இருந்து விடுவார் என்பது நூற்றுக்குத் தொண்ணூறு நிச்சயம் என்று அவன் எண்ணினான்.

வேறு யாராவது தன்னைப்போல் பொய்க் கையெழுத்திட்டு இருபது லட்சம் பிராங்குகளை எடுத்துக் கொண்டு ஓடியிருந்தால் அவன் இந்த உலகத்தில் எந்த மூலையில் இருந்தாலும் அந்தக் கிழவர் விடமாட்டார். ஆனால் தன் பிள்ளை, அதாவது இளைய சகோதரனின் மகன் அப்படிச் செய்து விட்டான் என்று அவர் வெளியில் சொன்னால் யாரும் சிரிப்பார்கள். தவிர, தன் உயிரைக் காட்டிலும் தன் குடும்பக் கௌரவத்தை டம்பமாகக் கருதும் கிழவருக்குப் பேசாமல் இருப்பதைத் தவிர வேறு வழி என்ன இருக்கிறது!

* * *

"பாரிஸ் நகரமே! நேற்று பரம ஏழையாக இருந்த உன் புதல்வன் இன்று லட்சப் பிரபுவாகி உன்னிடமிருந்து விடை பெற்றுச் செல்லுகிறான்."

இவ்விதம் டேனியல் உற்சாகத்துடன் சொல்லிக் கொண்டு ரயில் வண்டியில் ஏறினான்.

பாரிஸ் - ஹாவ்ரே எக்ஸ்பிரஸ் அதிவேகமாக ஹாவ்ரே துறைமுகத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. அங்கிருந்து கப்பலில் இங்கிலாந்துக்குச் சென்றுவிட வேண்டும் என்பது டேனியலின் திட்டம். அமெரிக்காவுக்குச் செல்லலாமா, வேண்டாமா என்பதை இங்கிலாந்துக்குச் சென்ற பின் யோசித்துக் கொள்ளலாம் அல்லவா!

டேனியல் தன் வாழ்க்கையிலேயே முதலாவது வகுப்பு வண்டியில் பிரயாணம் செய்தது அது தான் முதல் தடவை.



அவன் ரயில் வண்டியில் ஏறும்போது அவ்வழியாகச் சென்று கொண்டிருந்த 'கார்டை'ப் பார்த்து "இது ஹாவ்ரேக்குச் செல்லும் வண்டி தானே!" என்று கேட்டான்.

கார்டோ டேனியலை ஏறெடுத்துப் பார்க்கவில்லை. எங்கேயோ பார்த்த வண்ணம் 'ஆமாம்' என்று சொல்லிவிட்டுச் சென்றான்.

பேஷ்! ஒரு லட்சாதிபதியிடம் ரயில்வே அதிகாரிகள் நடந்து கொள்ளும் விதம் இப்படித் தானோ! மேற்படி கார்டின் மீது டேனியலுக்குக் கோபம் உண்டாயிற்று.

வண்டியில் ஏறியபின், பிளாட்பாரத்தில் பத்திரிகைகள் விற்றுக் கொண்டிருந்த ஒரு பெண்ணை அலட்சியமாகக் கூப்பிட்டான். எல்லாவற்றையும் காட்டிலும் அதிக விலையுள்ள ஒரு வார சஞ்சிகையை வாங்கிக் கொண்டான். அந்தப் பெண் கூட டேனியலை ஏறெடுத்துப் பார்க்கவில்லை. டேனியல் ஒரு லட்சப் பிரபு என்பது அவளுக்குத் தெரிந்திருந்தால்......!

ஒரு லட்சப் பிரபு முதலாவது வகுப்பு ரயில் வண்டியில் எப்படி உட்காருவார் என்பதை அவன் ஒருவாறு கற்பனை செய்து கொண்டு அப்படியே நிமிர்ந்து உட்கார்ந்தான்.

அவன் மிகவும் சங்கோசம் உள்ளவன் என்பது உண்மையே. எனினும் இனி அவனுக்கு உலகம் லட்சியமில்லை! பணம் நிறைய இருக்கும்போது எதற்காக சங்கோசப்படவேண்டும்? பணம் இல்லாத ஏழைகள் அல்லவா—அவர்கள் எவ்வளவு யோக்கியர்களாக இருப்பினும் புத்திசாலிகளாக இருப்பினும் யாரைக் கண்டாலும், எதற்கும் சங்கோசப்பட வேண்டும்! லட்சக்கணக்காகச் சொத்து உள்ளவர்கள் இரகசியமாகவோ அல்லது பகிரங்கமாகவோ எத்தகைய பெரும் குற்றம் செய்தாலும் சங்கோசப்பட வேண்டியதில்லை. அவர்கள் எதற்காக உலகத்தைக் கண்டு பயப்பட வேண்டும்! உலகம்தான் அவர்களைக் கண்டு நடுங்குகிறதே!

தன் மனதுக்குள்ளே அத்தகைய தர்க்கவாதத்தில் ஈடுபட்டிருந்த டேனியல் பெஷினின் சிந்தனைகள் திடீரென்று கலைந்தன.

அவன் தலையில் யாரோ சம்மட்டியினால் அடிப்பதுபோல் இருந்தது. தான் அது வரையில் கண்டதெல்லாம் கனவா என்ற பயங்கரமான எண்ணம் அவனை வாட்டியது. எனினும் ஒன்றிரண்டு நிமிஷங்களில் அவனது பிரமை நீங்கியது. தன் சட்டையைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். கரன்ஸி நோட்டுகள் அப்படியே இருந்தன. தான் காண்பது கனவு அல்ல என்பதை உறுதி செய்து கொண்டான்.

அதே சமயம் தன் சிந்தனைகளைக் கலைத்த, தன் எதிரில் நிற்கும் உருவத்தைப் பார்த்தான். கனவு உலகைத் தவிர நிஜ உலகில் அத்தகைய மோகன உருவத்தைக் காண முடியுமா என்ற சந்தேகம் மறுபடியும் அவனுக்கு ஏற்பட்டது.

பாரிஸ் நகரில் அவன் எத்தனையோ அழகிகளைப் பார்த்தது உண்டு. இயற்கை அழகுடன் செயற்கை அழகும் கலந்த சினிமா நட்சத்திரங்களையும் பார்த்திருக்கிறான். இருந்தாலும் தன் தலையைக் கிறுகிறுக்கச் செய்யும், பார்த்த மாத்திரத்திலேயே தன் சரீரம் முழுதும் புளகாங்கிதம் அடையும்படி செய்யும் அவளைப் போன்ற ஓர் அழகியை அவன் அதற்கு முன் கண்டதில்லை.

அவன் உட்கார்ந்திருந்த 'ஸீட்'டுக்கு எதிரில் அவள் வந்து நின்றாள். பிறகு தலைத் தொப்பியையும் மேல் கோட்டையும் எடுத்து அங்கு மாட்டினாள். அவளுடன் கூட யாராவது வந்திருக்

லாமோ என்ற எண்ணம் டேனியலை வாட்டத் தொடங்கியது.

எனினும் அவன் கண்களை அவனால் நம்ப முடியவில்லை. வண்டி புறப்பட்டு விட்டது. அந்த வண்டியில் வேறு யாரும் ஏறவில்லை! தன்னையும் அந்த அழகியையும் தவிர அந்த வண்டியில் வேறு யாருமே இல்லை!

அன்று வண்டியில் பல முதல் வகுப்புக் 'கோச்சு'கள் காலியாக இருந்ததை டேனியல் முதலிலேயே கவனிக்கத் தவறவில்லை. அப்படியிருக்க அந்தப் பெண் காலியாக இருக்கும் வண்டி ஒன்றில் ஏறாமல் தான் இருக்கும் வண்டியில் எதற்காக ஏறவேண்டும்! ஒரு வேளை அவள் துணைக்கு வேறுயாரும் வரவில்லையே என்பதற்காக அவன் இருந்த வண்டியில் ஏறியிருக்கலாம்.

நவீன நாகரிகமே உருவான அந்தப் பெண் தனியாகப் பிரயாணம் செய்ய அஞ்சித் துணையை நாடக்கூடும் என்று நினைப்பதற்கே இல்லை. எனவே, அந்தப் பெண் அவன் உட்கார்ந்திருந்த வண்டியில் ஏறியதற்கு ஒரே ஒரு அர்த்தம்தான் உண்டு! இது அவனுக்குத் தெரியும்!

இதை எண்ணியபோது டேனியலுக்குத்தான் இன்பக் கடலில் மூழ்குவது போல் இருந்தது.

அவள் டேனியலை ஒரு தடவை பார்த்தாள். அப்போது அவள் உதடு சிறிது அசைந்ததிலிருந்து அவள் புன்முறுவல் செய்திருக்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. உடனே ஒய்யாரமாக உடம்பை ஒரு தடவை நெளித்துக் கொண்டு வண்டியில் படுத்துக் கொண்டாள்.

அப்போது அவள் முன்னிலையில் டேனியலுக்குத் தான் ஒரு பரம ஏழை என்று தோன்றியது! ஆம், அவன் கையில் இருபது லட்சம் பிராங்குகள்தான் இருந்தன. ஆனால் அவளுடைய அழகு எத்தனை லட்சம் பெறும் என்பதை யாரால் கணக்கிட்டுச் சொல்ல முடியும்!

டேனியல் ஏதாவது பேசுவான் என்று அவள் எதிர்பார்த்தாள்.

டேனியலும் அதை அறிந்துகொண்டான். இருந்தாலும் எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது! எதைப் பற்றிப் பேசுவது! அந்தச் சமயத்தில் அவனைப் பாழும் சங்கோசம் வந்து ஆட்கொண்டது.

ஆனால் அந்தப் பெண் எள்ளளவும் சங்கோசப் படவில்லை. டேனியல் மிகவும் சங்கோசப் பிராணி என்பதை அவள் சில நிமிஷ நேரத்தில் அறிந்து கொண்டாள். எனவே, அவன் பேசும் வரையில் வீணாகக் காத்திருக்கவில்லை.

"தாங்கள் எது வரையில் செல்லுகிறீர்கள்!" என்று கேட்டாள்.

"ஹாவ்ரே" என்று பதில் கூறினான் டேனியல் வெகு சுருக்கமாக.

அவள் முதலில் பேசியும் கூட டேனியலுக்கு ஒரு வார்த்தைக்கு மேல் பேச முடியவில்லை!

"ரொம்பவும் சந்தோஷம்! நானும் ஹாவ்ரேக்குத்தான் செல்லுகிறேன்."

டேனியலுடன் பிரயாணம் செய்வதைச் சந்தோஷமான காரியமாக அந்தப் பெண் கருதுவதைக் காட்டிலும் டேனியலுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடிய விஷயம் வேறு என்ன இருக்க முடியும்! அவனுக்கு இன்ப உலகத்திலே பறப்பது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது!

சில நிமிஷங்களில் டேனியலின் சங்கோசம் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது. காதலர் இருவரும் மனம் விட்டுப் பேசத் தொடங்கிவிட்டனர்!

'கண்டதும் காதல்' என்று கூறுவதன் அர்த்தத்தை அன்றுதான் டேனியல் தன் சொந்த அனுபவத்தின் மூலம் அறிந்து கொண்டான். கையில் இருபது லட்சம் பிராங்குகள், பக்கத்தில் பாரிஸ் நகரையே மயக்கும் அழகி,—மனிதன் இன்ப வாழ்க்கை நடத்துவதற்கு இவ்விரண்டைத் தவிர உலகத்தில் வேறு என்ன வேண்டும்!

அடுத்த ஸ்டேஷனிலிருந்து வண்டி புறப்படும் தறுவாயில் டேனியல் யாதொரு காரணமுமின்றி எழுந்து வெளியே எட்டிப் பார்த்தான். அப்போது அவன் கண்ட காட்சி அவனைத் திடுக்கிடச் செய்தது.

டேனியல் தள்ளாடிக் கொண்டே தன் இடத்தில் வந்து உட்கார்ந்தான். அவனது நிலையில் ஏற்பட்ட மேற்படி திடீர் மாறுதலை அந்தப் பெண் கவனிக்கத் தவறவில்லை. இதைக் கண்டதும் அவள் முகத்திலும் பீதி தாண்டவமாடியது.

அதாவது டேனியல் எட்டிப் பார்த்தபோது வண்டியின் ஒரு கோடியில் ஒரு நபரும் மற்றொரு கோடியில் ஒரு நபரும் அவசரம் அவசரமாக ஏறிக் கொண்டனர். அவ்விருவரும் இரகசிய போலீசைச் சேர்ந்தவர்கள் என்பது டேனியலுக்கு உடனே தெரிந்து விட்டது. ஏனெனில் அவர்களில் ஒருவர் தன் பெரிய தந்தையின் கம்பெனிக்கு எப்போதாவது வருவதை அவன் கவனித்தது உண்டு.

இல்லாவிடில் அவ்விருவரும் நாகரிக உடை உடுத்திய கொள்ளைக்காரர்கள் என்றே டேனியல் நினைத்திருப்பான். கொள்ளைக்காரர்கள் தன்னைப் பின் தொடருவதற்குக் காரணம் இல்லை என்பது அவனுடைய அபிப்பிராயம். ஏனெனில் அவன் பாங்கி மூடும் சமயத்தில்தான் செக்கிற்குப் பணம் வாங்கிக் கொண்டான். அப்போது பணம் கொடுக்



கும் ஜன்னலுக்கு அருகில் அவனைத் தவிர வேறு யாரும் இல்லை.

மிருந்த கலக்கத்துடன் வண்டியில் வந்து உட்கார்ந்த டேனியலை அந்தப் பெண் உற்றுப் பார்த்தாள். அவன் அவளைப் பார்த்தான்.

"உன்னை என் காதலி என்று அழைக்க எனக்கு இனிமேல் உரிமை உண்டு அல்லவா! என்னை ஓர் ஆபத்து நெருங்கிக் கொண்டிருக்கிறது. நீ மனம் வைத்தால் அதிலிருந்து என்னைத் தப்புவிக்க முடியும்" என்றான் டேனியல் பரிதாபகரமான குரலில். அவள் உடம்பு நடுங்கியது.

"நான் என்ன செய்ய வேண்டும்!" என்று கேட்டாள் அவள்.

டேனியலின் மூளை வெகு தீவிரமாக வேலை செய்யத் தொடங்கியது. அவன் தன் சட்டையை அவிழ்த்தான். தன்னிடமிருந்த கரன்ஸி நோட்டுக் கட்டுகளை அப்படியே அவளிடம் கொடுத்தான். அவள் அதைத் தன் பையில் நிதானமாக வைத்துக் கொண்டாள்.

"நீ இப்போதே வேறு முதல் வகுப்பு வண்டி ஒன்றில் போய் உட்கார்ந்து கொள். பிறகு நாவ்ரே ஸ்டேஷனில் சந்திப்போம். மற்ற விஷயங்களைப் பிறகு சொல்கிறேன்" என்றான் டேனியல் பரபரப்புடன்.

அந்தச் சமயத்தில் அவளுக்கு அவ்விதம் செய்வதைத் தவிர வேறு எதுவும் தோன்றவில்லை.

*          *          *

டேனியல் தன் வண்டியில் உள்ள விளக்கை அணைத்தான். தூங்குவதுபோல் பாசாங்கு செய்தான். ஆனால் அவன் கவனம் முழுதும் வெளியிலேயே இருந்தது.

அடுத்தபடியாக ரயில் வண்டி ஒரு ஸ்டேஷனில் நின்றது. டேனியல் எழுந்திருக்கவில்லை.

அவனுடைய நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டிருந்தது. வெளியே ஏதோ பேச்சுக் குரல் கேட்பது போல் இருந்தது. சந்தடி செய்யாமல் மெதுவாகக் கதவைத் திறந்து கொண்டு உற்றுக் கேட்டான்.

முதல் நபர் : என்ன! பாரிஸ் ராணி பறந்தோடி விட்டாள் போல் இருக்கிறதே!

இரண்டாவது நபர் : ஆமாம்! அவளுக்கு விரோதிகளான நாம் இருக்கும் இடத்தில் அவளுக்கு வேலை எதுவும் இல்லை அல்லவா!

முதல் நபர் : நாம் இன்று வராவிட்டால் செல்வப் பிள்ளை டேனியல் பெஷினின் நிலைமை ஆபத்தாக முடிந்திருக்கும். நாம் இங்கு இருப்பதை அறிந்து தான் பாரிஸ் ராணியின் சகாக்கள் இந்த வண்டியில் ஏறவில்லை.

இரண்டாவது நபர் : இந்தத் தடவை கூட நாம் அவளைக் கைது செய்ய முடியவில்லையே!

முதல் நபர் : டேனியல் பெஷினுக்குப் பாதுகாப்பு அளிப்பது தான் நம்முடைய வேலையே யன்றி பாரிஸ் ராணியைக் கைது செய்வது இப்போது நமது வேலை அல்ல. தவிர தகுந்த ஆதாரமின்றி அவளைக் கைது செய்தால், பார்லிமெண்டில் உள்ள சில புத்திசாலிகள் கூச்சலிடுவார்கள். 'முதல் வகுப்பு வண்டியில் பிரயாணம் செய்து கொண்டிருந்த கௌரவம் வாய்ந்த குடும்பத்தைச் சேர்ந்த ஒரு சீமாட்டியைப் போலீஸார் காரணமின்றிக் கைது செய்தது போலீசாரின் எதேச்சாதிகார ஆணவத்தைக் காட்டுகிறது' என்று ஆர்ப்பாட்டம் செய்வார்கள்.

இவர்கள் பேசுவதன் அர்த்தம் என்ன என்பதை டேனியல் பெஷினால் அறிந்து கொள்ள முடியவில்லை. எனினும் அவர்கள் தனக்கு விரோதிகள் அல்ல என்பதை மாத்திரம் அவனால் ஒருவாறு ஊகிக்க முடிந்தது. மறுபடியும் நடந்த சம்பாஷணை அவனுக்கு நிலைமையை யாதொரு சந்தேகத்துக்கும் இடமின்றித் தெளிவு படுத்தி விட்டது.

இரண்டாவது நபர் : பெரும் செல்வந்தரான ஸ்டீபன் பெஷின், தம்முடைய வாரசுதாரரான டேனியல் பெஷின் வெளியில் செல்வதால் அவனுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்று இரகசிய போலீஸ் இலாகாத் தலைவருக்குக் கடிதம் எழுதியிருக்கிறார். அவ்விஷயமாக எவ்வளவு செலவு ஏற்பட்டாலும் தாம் ஏற்றுக் கொள்ளத் தயார் என்றும் குறிப்பிட்டிருக்கிறார். அமெரிக்கக் கொள்ளைக்காரர்களைப் பின் பற்றிப் பாரிஸ் கொள்ளைக்காரர்களும் சமீபகாலமாகப் பணக்காரர் வீட்டுப் பிள்ளைகளைத் தூக்கிக் கொண்டு சென்று ஈடுப் பணம் கேட்பது சகஜமாக இருக்கிறது அல்லவா!

முதல் நபர் : இந்த உதவாக்கரைப் பிள்ளை மீது அந்தக் கிழவருக்கு உள்ள பாசத்தைப் பார்! ஆனால் இந்தப் பையனோ வெளியில், தன் அந்தஸ்தையோ, தன்னைச் சூழ்ந்துள்ள ஆபத்தையோ சிறிதும் அறியாமல் கவலையின்றித் தூங்கிக் கொண்டிருக்கிறானே!

முதலாவது நபர் இவ்வாறு கூறியதும் இருவரும் சேர்ந்து சிரித்தனர். ஆனால் டேனியலுக்கோ அவன் வயிறு பற்றி எரிந்தது. தன்பெரிய தந்தையைப் பற்றித் தான் நினைத்துக் கொண்டிருந்தது பெருந்தவறு என்பதையும், அவர் அவரது சொத்துக்களுக்கெல்லாம் உண்மையில் தன்னையே வாரிசாகக் கருதுகிறார் என்பதையும் அறிந்து கொண்டான். தான் பொய்க் கையெழுத்திட்டுப் பாங்கியில் பணம் வாங்கியதன் மூலம் தன் பணத்தைத் தானே கொள்ளையடித்து விட்டதாக அவனுக்குத் தோன்றியது.

அதே சமயம் தன் வண்டியில் வந்து உட்கார்ந்த பெண் கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவள் என்பதையும் இரகசிய போலீசாரின் சம்பாஷணையிலிருந்து தெரிந்து கொண்டான். தானாக வலுவில் அவளிடம் கொண்டுபோய் இருபது லட்சம் பிராங்க் நோட்டுகளைக் கொடுத்ததைக் காட்டிலும் மடத்தனம் வேறு என்ன இருக்க முடியும் என்று பதறினான்.

சில வினாடிக்குள் இத்தனை எண்ணங்களும் ஏக காலத்தில் அவன் மனத்திலே அலைமோதிக் கொண்டு எழுந்தன.

அவ்வளவுதான்! தன் தேகத்தில் மின்சாரம் பாய்ந்தது போல் துள்ளி எழுந்தான். வெளியே ஓடினான். "கொள்ளை, கொள்ளை, அவளைப் பிடியுங்கள்" என்று அலறினான்.

இரகசியப் போலீஸ் அதிகாரிகள் திடுக்கிட்டனர்.

"அந்தப் பெண் எங்கே!" என்று கேட்டான்.

"அவள் மூன்றாவது ஸ்டேஷனில் இறங்கிப் போய் விட்டாளே" என்றார் இருவரில் ஒருவர்.

டேனியல் பெஷினுக்குத் தலை சுற்றியது.

"உங்களையே திருடிக்கொண்டு போய் விடாமல் உங்கள் பணத்தை மாத்திரம் திருடியதுடன் உங்களை விட்டாளே!" என்று கூறி விட்டு மற்றொரு அதிகாரி சிரித்தார்.

அவளிடமிருந்து பாரிஸ் ராணி நூற்றுக் கணக்கில் ஏதாவது தொகையைத் திருடிக்கொண்டு போயிருக்கலாம் என்றே அந்த அதிகாரிகள் எண்ணினர். அவளிடம் இருபது லட்சம் பிராங்குகள் இருந்தது என்பதும், அதை அவன் அவளிடம் வலுவில் கொடுத்து ஏமாந்து விட்டான் என்பதும் அவர்களுக்கு எப்படித் தெரியும்!

- செடி, கொடி, மரங்கள் வளர்ச்சி பெருமல் நின்ருல் மடிவு காலம்.

- அதேபோல் வியாபாரம் வளர்ச்சி யின்றேல் மடிவுதான்.

- எங்கள் வியாபாரம் வருஷா வருஷம் வளர்ச்சி பெற்றுக்கொண்டே வந்திருக்கிறது.

- நியாயமான வர்த்தக முறை இன்றேல் வளர்ச்சி யிருக்க முடியாது.

- நாங்கள் சொல்வதும் எங்கள் வாடிக்கைக் காரர்கள் நினைப்பதும் சரிதானுவென்று, தங்களுக்கு பட்டு, நூல், கம்பளித் துணிகள் தேவையுள்ள பொழுது எங்களை விசாரியுங்கள்.

- **6, 8, 9 கஜம் உயர்ந்த பங்களூர், பனரீஸ், காஞ்சீவரம், பங்கால்,** பட்டுப் புடவை களுக்கு எங்கள் கடைகள் பெயர் போனவை.

- ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள் எங்க ளிடம் கிடைக்கும்.

○●○

# 'பேப்பர்' சொன்ன கதை!

எஸ். என். பழனிசாமி (மாணவர் கட்டுரைப் போட்டி)

முதற் பரிசு

ரயில் அந்த ஸ்டேஷனில் நின்ற உடனே பல ஆவேசமான இளங் குரல்கள் ஸ்டேஷனில் இருந்த மற்றவர்களின் குரலுக்கு மேல் ஒலித்தன. அடுத்த சில நிமிஷங்களில் என்னுடைய நண்பர்களில் பலர், மாணவ நண்பர்களின் கைகளில் ஏறினர்.

நானும் ஒரு மாணவனின் கையில் ஏறினேன். கடவுளின் கட்டளைப்படி சுற்றிலும்நடக்கும் மாணவர் சம்பந்தமான விஷயங்களைக் கூர்ந்து கவனிக்க ஆரம்பித்தேன்.

என்னைப் பிடித்திருந்த மாணவன் முதலில் என்னைக் கண்களில் பயபக்தியுடன் ஒத்திக் கொண்டு, கை நடுங்கக் கால் நடுங்க. உடல் நடுங்க, உள்ளம் நடுங்க என்னைப் பிரித்தான். பேப்பரைப் பயபக்தியுடன் கண்ணில் ஒத்திக் கொண்டு பிரித்தால் தன்னுடைய நம்பர் இருக்குமென்ற நினைப்பு அவனுக்கு.

இதற்குள் ஒவ்வொரு பேப்பரின்மீதும் ஐந்து ஜோடிக் கண்கள் பத்து ஜோடிக் கண்கள் இப்படிப் பரபரப்புடன் மொய்த்தன.

ஸ்டேஷனுக்கு வரச் சௌகரியப் பட்டவர்கள் மாத்திரம் வந்திருக்கிறார்கள்; இன்னும் எத்தனை ஆயிரம் மாணவ உள்ளங்கள் எங்களை எதிர் பார்த்துப் பஸ் ஸ்டாண்டில் காத்துக் கிடக்கின்றனவோ!

"ஒரு காரியத்தில் அளவுக்கு மீறி வெற்றியை எதிர் பார்த்து ஏமாற்றமடையாதே! காரியத்தில் தோல்வி என்று முன் கூட்டியே தீர்மானம் செய்து மனத்தைத் திடப்படுத்திக் கொண்டால் உண்மையாகவே தோல்வி ஏற்பட்டாலும் மனம் தாங்கிக் கொள்ளும்" என்று ஏதோ ஒரு பத்திரிகையில் பார்த்ததாக ஞாபகம். ஆனால் இந்தப் பொன் மொழியில் ஆயிரத்தில் ஒரு பங்கையாவது அங்கே கூடியிருந்த மாணவர்கள் நினைத்தார்களா என்றால் அதுதானில்லை.

"தமிழ் நாட்டு மாணவர்கள் உணர்ச்சிமயமானவர்கள்" என்பதை அன்று நேருக்கு நேர் கண்டேன். ஒரு மாணவன் "அப்பாடா! எனக்கு இப்பத்தான் உயிர் வந்தது" என்று திருப்தியாக மூச்சு விட்டான். ஒரு 'புஷ்' கோட்டு மாணவன் கையிலிருந்த பேப்பரைப் பக்கத்தில் நின்றிருந்த பையனின் முகத்தின் மீது வீசி எறிந்து விட்டு 'ஹைய்ய்!' என்று சந்தோஷமாகக் கத்திக் கொண்டே ஓடிவந்து ஒரு 'கூந்தல்' மாணவனின் சிகையைப் பிடித்து ஒரு குலுக்குக் குலுக்கினான். தன்னுடைய நம்பரைப் பேப்பரில் கண்டு விட்ட 'குடுமி' மாணவன் தன் குடுமியே பறி போனாலும் கவலைப்படுவானா? உடனே தலையைத் தட்டி முடிந்து கொண்டான்.

கண்ணாடியணிந்த ஒரு 'ஷோக்' மாணவனை நினைத்தால்தான் எனக்கு இன்னும் பரிதாபமாயிருக்கிறது. கண்ணாடியைக் கழற்றி நன்றாகத் துடைத்து விட்டுக் கொண்டும் பார்த்தான். தன்னுடைய நம்பரைக் காணவில்லை போல் இருக்கிறது. இல்லா விட்டால் அவனுடைய முகம் அவ்வளவு ஏமாற்றத்தைக் காட்டக் காரணம்?

அங்கே நின்றிருந்தவர்களெல்லாம் அவனுக்கு யமகிங்கரர்கள் போல் தோன்றியிருக்க வேண்டும்; வகுப்புக்குச் சரியாகப் போகாமல் மட்டம் போட்டு விட்டுச் சீட்டாடிய காட்சியெல்லாம் கண்முன் தோன்றியிருக்க வேண்டும்; பாடம் நடக்கும்போது, சரியாகக் கவனிக்காமல் ஜோராகத் தூக்கம் போட்ட இன்ப நினைவெல்லாம் தோன்றியிருக்க வேண்டும்; பரீட்சைக்கு மூன்று நாட்களுக்கு முன் வரையில் பார்த்த சினிமாக்காட்சிகளெல்லாம் தோன்றியிருக்க வேண்டும்; பரீட்சைக்கென்று படித்த "மூன்று நாட்களுக்கு மட்டும்" ஆன காப்பி, சிகரெட் செலவுக் கணக்கு கண்முன் தோன்றியிருக்க வேண்டும். இல்லா விட்டால் அவனுடைய முகம் வினாடிக்கு வினாடி விநோதமாக மாறவேண்டிய காரணமே இல்லை. இருந்தாலும் அந்தப் பையன் 'மன வைக்கம்' உள்ளவன். கோழை மாணவர்களைப்போல் தன்னுடைய தோல்விக்காகப் பெண்மணிகளும் வெட்கப்படும்படி கண்ணீர் விடவில்லை. சிதறிக் கிடந்த தைரியத்தையெல்லாம் ஒன்று திரட்டித் தன்கோபத்தையெல்லாம் தன் கையிலிருந்த பத்திரிகை மேல் காட்டினான். 'டர்ர்ர்!'—பேப்பரை

இரண்டாக, நான்காக, துண்டு துண்டாகக் கிழித் தெறிந்தான். அவன் அப்படிப் பேப்பரைக் கிழித்தால் தன் பேப்பர் திருத்தினவரின் குடலைக் கிழித்தது போல் அர்த்தமாம். கிழிந்த துண்டுகளை எல்லாம் விசி எறிந்து விட்டு ரயில் வே ஸ்டேஷனை விட்டு வேகமாக வெளியேறினான்.

அடடா! கொஞ்ச நேரத்துக்குள் அங்கே நான் கண்ட காட்சி! ஒரு முகத்தில் லட்ச ரூபாய் லாட்டரிவிழுந்தவன் முகத்தைப் போல் சந்தோஷம்! ஒரு முகத்தில் பத்துக் கப்பல்கள் சேர்ந்தாற் போல் கவிழ்ந்த வியாபாரியின் முகத்தைப் போல் வருத்தம்! ஒருவன் சந்தோஷத்தால் குதிக்கிறான், 'டான்ஸ்' பண்ணுகிறான்! ஒருவன் தன் கண்ணீரை மறைக்க முயற்சி செய்கிறான்! ஒருவன் கைகள் நடுங்குகின்றன. ஒருவன் கைகள் சந்தோஷத்தால் பல பேர்களின் முதுகைப் பதம் பார்ப்பதுடன் எதிர்ப்பட்ட கைகளை எல்லாம் குலுக்குகின்றன. ஒருவன் நான் 'பஸ்ட்கிளாஸ்' என்கிறான். ஒருவன் 'செகண்ட் கிளாஸ்' என்கிறான். ஒருவன் வானத்தைப் பார்க்கிறான்; ஒருவன் பூமியைப் பார்க்கிறான். இந்தக் கண் நிறைந்த பரிதாபகரமான காட்சியைக் கடவுள் பார்த்திருப்பாரானால் இந்தப் பரீட்சையையே ஒழித்துக் கட்டிவிட்டுத்தான் மறு காரியம் பார்த்திருப்பார்.




என்னைப் பிடித்திருந்த பையன் அவசர அவசரமாக என்னை மடித்துக் கையில் பிடித்தபடி வீட்டுக்குக் கிளம்பினான். இனி வீட்டில் எத்தனை பேர் எனக்காகக் காத்திருக்கிறார்களோ!

வழியில் இன்னொரு வேடிக்கை. அப்பொழுதுதான் பஸ் ஸ்டாண்டுக்குப் பேப்பர் வந்திருக்கும்போல் இருக்கிறது. ஆனால் என்ன ஆச்சரியம்! பேப்பர் விற்கும் பையன் மாணவர்களின் 'திருவருளால்' ஒரு கையில் பேப்பரைப் பிடித்துக்கொண்டு மாணவர்களின் தலைக்குமேல் கூட்டத்தில் மிதந்தான். பையன் தன்னையும் தன் கையிலுள்ள பேப்பரையும் காப்பாற்ற என்னதான் முயன்றும் முடியவில்லை. அவன் கையிலிருந்த பேப்பர்களும் வேகமாக மறைந்து கொண்டிருந்தன.

பேப்பர் விற்கும் பையன் கண்டபடி திட்டிக் கொண்டு அழ ஆரம்பித்தான். ஆனால் இன்னும் பத்து நிமிஷங்களுக்கு அவனைத் தேற்றுவார் யார்?

நான் அந்தப் பையனுடன் சைக்கிளில் பிரயாணம் செய்து கொண்டிருந்தேன். அவனுடைய வீட்டுக் காம்பவுண்டுக்குள் சைக்கிள் நுழையும் போதே, 'நான் பாஸ்' என்று கத்தினான். அவனை எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஐந்தாறு பெண்கள் அவன் கையிலிருந்த பேப்பரை வெடுக்கென்று பிடுங்கிப் பிரித்தனர். அப்பப்பா! அவர்கள் தங்களுடைய நம்பர்கள் இருக்கிறதா என்று என்னைச் சோதிப்பதற்குள் அவர்கள் நடுங்கின நடுங்கலுக்குக் கணக்கில்லை. பிடிக்காத மாப்பிள்ளைக்குத் தங்களைக் கலியாணம் செய்து கொடுத்திருந்தாலுங்கூட அவர்கள் அப்படி நடுங்கியிருக்க மாட்டார்கள்.

* * *

"ஆமாம், பேப்பரை மேஜைமேல் விரித்து வைத்து விட்டு என்னவோ பெரிய கோட்டையைப் பிடிக்கிறவன் மாதிரி காலைப் பரப்பிக் கொண்டு தூங்கி விழுந்து கொண்டு யோசனை செய்கிறாயே? நீ பாஸ்தானே!" என்ற குரலைக் கேட்டுப் பகல் தூக்கத்திலிருந்து திடுக்கிட்டு விழித்தேன்.

அப்பொழுதுதான் ஊரிலிருந்து வந்த என் மாமா தோல் பையை என் மேஜைமேல் வைத்தார்.

பரீட்சை ரிசல்ட்டைத் தாங்கிக்கொண்டு என் மேஜைமேல் கிடந்த பேப்பர் என்னைப் பார்த்துப் பரிகசிப்பது போல் காற்றில் படபடவென அடித்துக் கொண்டது.

"அவன் பாஸ் பண்ணினதை நீதான் பார்க்கணும். பரீட்சை சமயத்தில் புஸ்தகமும் கையுமாக இருக்கிறதை விட்டுவிட்டுக் 'கிரிக்கெட்' மட்டையும் கையுமாயிருந்தால் எப்படிப் பாஸ் பண்ணுவான்?" என்று சொல்லிக் கொண்டே அம்மா உள்ளே நுழைந்தாள்.

நான் முறைத்துப் பார்த்தேன். ஏனென்றால் நான் தைரியமுள்ள மாணவன்!



வனப்பை அடையுங்கள்
100% சுத்தமான எண்ணெயை மூலப் பொருளாகக் கொண்ட, கேரள சாண்டல்வுட் ஸோப்பிலுள்ள சந்தன எண்ணெய் சருமத்தை வளர்ப்பதோடு உண்மையான அழகிற்கு அவசியமான சுதசுதப்பையும் உயிரையும் உங்கள் சருமத்திற்கு அளிக்கிறது இதன் மிருதுவான கிரீம் போன்ற நுரை நீடித்த பரிமளத்துடன் உங்கள் சருமத்தினுள் நன்றாக வேலை செய்து அதை மிருதுவாகவும் வழவழப்பாகவும் செய்கிறது.
கேரளா
ஸாண்டல்வுட்
சோப்
SANDALWOOD
சருமத்தை அழகுபடுத்துகிறது
கேரள ஸோப் இன்ஸ்டிட்யூட், கோழிக்கோடு
டிபார்ட்மெண்ட் ஆப் இண்டஸ்ட்ரீஸ் அண்டு காமர்ஸ்,
கவர்ன்மெண்ட் ஆப் மதராஸ்.
SISTA'S-KS-16-B-TAMIL




# மூன்று ராஜகுமாரர்கள்

சாந்தகுமாரி தன் வரலாற்றைக் கூறலானாள்:—

" என் தந்தை விக்கிரம சிங்க ராஜாவுக்கு நான் மிகவும் அருமைப் புதல்வியாகத்தான் இருந்து வந்தேன். அதுவும் நான் பிறந்தவுடனேயே என் தாயார் இறந்து விட்டதனால் என்மீது தாயின் அன்பையும் சேர்த்து வைத்திருந்தார்.

ஒரு சமயம் என் அப்பா திக்விஜயம் செய்யப் புறப்பட்டார். அப்போது விதர்ப்ப நாட்டு இளவரசியை இளையாளாக மணந்து கொண்டு திரும்பி வந்தார். முதலில் எல்லாம் என் சித்தி என்னை மிக்க அன்புடன்தான் நடத்தி வந்தாள். ஆனால் என்மீது என் தந்தை வைத்துள்ள அன்பைப் பார்த்தவுடன், அவளுக்கு என்மீது ஏனோ பொறாமையுண்டாகி விட்டது. என்னைக் கொடுமைப் படுத்தத் தொடங்கினாள்; பணிப் பெண் போல் வேலை வாங்கினாள். எதற்கும் நான் பதில் சொல்லாமல் அவள் சொன்னபடியெல்லாம் நடந்து வந்தேன். இந்தக் குணமே என்னைக் கண்டால் அவளுக்குப் பிடிக்காமற் செய்து விட்டது. கடைசியாக ஒரு மந்திரவாதியைக் கொண்டு என்னை ஏமாற்றி இங்கே அழைத்து வந்து கற்சிலையாகச் செய்து விட்டுப் போய் விட்டாள். இது நடந்து வருஷம் பத்துக்கு மேல் ஆகிறது.

நான் கற்சிலையாக மாறி நடக்க முடியாதவளாகிவிட்டேன்; பேச முடியாதவளாகி விட்டேன்; அழக் கூட முடியாதவளாகி விட்டேன். ஆயினும் ஒரு வசதியிருந்தது. நான் எந்த தேசத்துக்கும் சூட்சும உருவில் செல்லக் கூடியவளாக இருந்தேன். யாருடைய கனவிலும் தோன்றிப் பேசக் கூடிய சக்தி பெற்றவளாக இருந்தேன். எனவே, நான் இது வரை எத்தனையோ அரசர்கள் கனவில் தோன்றி என் குறையைச் சொல்லியிருக்கிறேன்; எத்தனையோ வீர தீர பராக்கிரமங்கள் புரிந்த ராஜகுமாரர்கள் கனவில் தோன்றி என்னை இந்தக் கற்சிலை உருவிலிருந்து விடுவிக்குமாறு கேட்டுக் கொண்டிருக்கிறேன். என் தந்தையின் கனவில் கூடத் தோன்றிக் கேட்டுக் கொண்டேன். எல்லோரும் என்னுடன் கனவில் பேசும் போது " நான் இப்போதே இந்த நிமிஷமே உன் கஷ்டத்தைத் தீர்த்து விட்டுத் தான் மறு காரியம் பார்க்கப் போகிறேன் " என்று கூறுவார்கள். ஆனால் பொழுது விடிந்து படுக்கையை விட்டு எழுந்திருக்கும்போது முதல் நாள் இரவு கண்ட கனவு சற்றும் நினைவிராது. மறந்து போய்விட்டிருப்பார்கள்.

ஒரு நாள் இந்தப் பாழடைந்த மாளிகைக்கு ஒரு முனிவர் வந்தார். அவர் என் சிலையின் அடியில் சற்று ஓய்வெடுத்துக் கொள்ளப் படுத்தார். அவரைப் பார்த்தவுடனேயே எனக்கொரு எண்ணம் உதித்தது. ' நான்

## 5 சாந்தகுமாரியின் கதை

இத்தனை நாட்களாக அரசர்களையும் இளவரசர்களையுமே என் கஷ்டத்தை நீக்குமாறு கெஞ்சிக் கேட்டுக் கொண்டிருந்திருக்கிறேன். அவர்களால் முடியவில்லை. ஒருவேளை இந்தத் தவச் சிரேஷ்டர், தம் தவ வலிமையால் என்னைப் பழைய நிலைக்குக் கொண்டுவரலாம் அல்லவா?' என்று நினைத்தேன். உடனே படுத்துத் தூங்கிப்போன முனிவரின் கனவில் தோன்றி, அவர் காலில் விழுந்து, என் குறையைச் சொல்லிக் கொண்டேன்.

அவர், "அம்மா, காந்தார தேசத்து மன்னர் நோயுற்றிருக்கிறார். அவருக்காக ஜீவரசம் என்றதோர் ஔஷதத்தைத் தயார் செய்து கொண்டு போய்க் கொடுக்கப் போகிறேன். வழியில் இங்கே தங்கினேன். தங்கின இடத்தில் உன் துயரக் கதையைக் கேட்டேன். ஆகவே, நான் ஒரு யுக்தி செய்கிறேன். இந்த ஜீவரசத்தை இங்கேயே வைத்து விட்டுப் போகிறேன். அந்த மன்னனுக்கு மூன்று குமாரர்கள். அவர்களிடம் போய் ஜீவரசம் இங்கே யிருப்பதாகச் சொல்லுகிறேன். அந்த மூன்று ராஜகுமாரர்களுள் யார் வந்து உன்னை மீட்கிறார்களோ அந்த இளவரசனிடம் இந்த ஜீவ ரசத்தைக் கொடுத்து அவன் கழுத்தில் மாலையிட்டு நீடூழி காலம் சந்தோஷமாக வாழ்வாயாக!" என்று கூறிவிட்டுத் தூக்கத்திலிருந்து எழுந்திருந்தார்.

கனவில் என்னிடம் கூறியதை மறக்காமல் என் பீடத்துக்குப் பின்புறம் இருந்த பொந்தில் ஒரு தாமிர பாத்திரத்தில் ஜீவரசத்தை வைத்து விட்டுச் சென்றார் முனிவர்.

பிறகு நான் உங்கள் சகோதரர் இருவர் கனவிலும் தோன்றி ஜீவரசம் இருக்கும் விவரத்தைக் கூறினேன். அவர்களும், மற்றவர்களைப் போலவே என்னை மறந்து விட்டார்கள் " என்று கூறிச் சற்று நிறுத்தினாள்.

" நான்தான் ஜீவரசத்தை மறந்துவிட்டு, உன்னையே ஞாபகத்தில் வைத்துக் கொண்டு இவ்வளவு தூரம் வந்தேனாக்கும். இல்லையா?" என்றான் சூரியகுமாரன் சிரித்துக் கொண்டே.

"ஆமாம்" என்று கூறி விட்டு அவனும் அவனுடன் சேர்ந்து கலகல வென்று சிரித்தான்.

* * *

பிறகு சூரிய குமாரன், சாந்தகுமாரியை முனி புங்கவர் ஜீவரசம் வைத்துள்ள இடத்தைக் காட்டச் சொன்னான்.

அப்படியே சாந்தகுமாரி காண்பித்தாள். தக தக வென்று ஒளி வீசும் தாமிர பாத்திரத்திலிருந்த ஜீவரசத்தைக் கண்டவுடனே புல்லரித்தது. சூரிய குமாரன் பாத்திரத்தைக் கையில் எடுத்துக் கொண்டான். முதன் முதலில் அரண்மனைக்கு வந்து ஜீவரசத்தைப் பற்றிச் சொன்ன அந்த முனிவரை நினைத்து அவருக்கு வணக்கம் செலுத்தினான். இனி தந்தையின் நோய் தீர்ந்தது என்று தீர்மானித்தான்.



தந்தையின் நினைவு வரவே, அவர் நோயின் காரணமாக எவ்வளவு துடிக்கிறாரோ! துன்புறுகிறாரோ! அவருக்கு இந்த ஜீவரசம் வெகு சீக்கிரம் கொண்டு போய்க் கொடுக்க வேண்டும். நோயின் தொந்தரவிலிருந்து அவரைச் சீக்கிரம் விடுவிக்க வேண்டியது தன் கடமை யல்லவா — என்றெல்லாம் நினைத்தான்.

"சாந்தகுமாரி! நான் புறப்படட்டுமா? இந்த ஜீவரசத்தை உடனே என் தந்தைக்குக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும்!" என்றான்.

"நான் என்ன ஆவது? என்னை நீங்கள் இனி மறந்துவிட வேண்டியது தானா?" என்றாள்.

"என்றால் உன்னை மறக்க முடியுமா, சாந்தகுமாரி? என் தந்தைக்கு உடம்பு குணமானவுடன் உன்னை வந்து உங்கள் நாட்டில் பார்க்கிறேன். இப்பொழுது எனக்கு விடை கொடு" என்று துடித்தான்.

"இங்கிருந்து நான் எப்படிப் போவது ராஜகுமாரா?" என்றாள் சாந்தகுமாரி.

"உனக்கு ஒரு குதிரை கொடுத்தால் நீ தனியாகப் போய் விடுவாயல்லவா?" என்றான்.

"ஓ" என்றாள். உடனே மந்திரக் கோலால் அங்கிருந்த ஒரு மண் குதிரையைத் தட்டினான். அது உயிர் பெற்றெழுந்தது. அதிலேறிச் சாந்தகுமாரி விரைந்தாள். (தொடரும்)

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 25. சிரசாசனம் ஒரு கற்பகத்தரு!

ஆம். வேண்டிய யாவும் விருப்புடன் அளிக்கும் கற்பகத் தருவேயாகும். தேவலோகத்தில் தான் இக் கற்பகத் தருவைப் பார்க்க முடியுமென்பதில்லை. தலைகீழாக நாம் நின்று விட்டால், வானிலிருந்து கற்பகத் தரு வலியக் கீழே இறங்கி விடுகிறது. தலை கீழாக நின்றால் மேலிருப்பது கீழே வர வேண்டியது நியாயம்தானே!

### உயரமாக வளர வேண்டுமா?

உயரமாக வளர வேண்டுமானால் சிரசாசனம் செய்யுங்கள். சுண்ணாம்புச் சத்து (கால்ஷியம்) தான் எலும்பை வளர்க்கவும், உறுதிப் படுத்தவும் அவசியமென்றாலும், பிட்யூடரி, ஹார்மோனும் சேர்ந்துதான் எலும்பு வளர்ச்சி ஏற்படுகின்றது. பிட்யூடரி தாறுமாறாக வேலை செய்தால், மனிதன் ஏழு அடி எட்டு அடியென்று ராட்சத உருவத்தில் வளருவான். அது சரிவர வேலைசெய்யாவிடில் எலும்பு வளர்ச்சியே யின்றி இரண்டு மூன்றடி குள்ளர்களாகவே நின்று விடுவார்கள். எனவே பிட்யூடரியின் வேலையைப் பொறுத்துத் தான் எலும்பின் வளர்ச்சி ஏற்படுகிறது.

ஆனால், சிரசாசனம் செய்ததும் நான்கு அடி உள்ளவர்களெல்லாம் ஐந்து அடி உயரமும், ஐந்தடி உள்ளவர்களெல்லாம் ஆறடி உயரமும் வளர்ந்து விடலாம் என்று நினைத்தால் அது சாத்தியமில்லை. இது விளம்பர மல்ல, வாரத்துக்கு ஒரு அங்குலம் வீதம் வளரலாம் என்று சொல்ல. உண்மையாய் இருக்கும் நிலைமையைச் சொல்லத்தான் வேண்டும். உயரமாய் வளர்வதோ குட்டையாய் வளர்வதோ பரம்பரையைப் பொறுத்த விஷயம். அதை அதிகம் மாற்ற முடியாது. சிரசாசனம் செய்வதனால், இரண்டு அல்லது மூன்றங்குலம் உயரமாக வளரலாம். அதுவும் பதினெட்டு இருபது வயதிற்குள் செய்தால்தான் முடியும். அதற்கு மேற்பட்ட வயதுள்ளவர்கள் செய்தால் வளர முடியாது. ஒரு நாள் விடாமல் பல வருடங்கள் செய்தால் ஒரு அங்குலம் வளரலாம். இருபது வயதிற்கு மேற்பட்டவர்கள் செய்தால், பிறகு தாம்பத்திய வாழ்க்கையில் பிறக்கும் குழந்தைகள் உயரமாக வளரலாம். சிறுவர்கள் செய்தால் அவர்களும் உயரமாக வளரலாம்.

சிரசாசனம் செய்தால் எப்படி உயரமாக வளர முடியும்? சிரசாசனம் செய்யும்போது, சிரசிற்கு ரத்தம் ஏராளமாகப் பாய்கிறது. அப்பொழுது பிட்யூடரி கோளத்திற்கு நல்ல போஷணை ஏற்படுகிறது. அதிலிருந்து ஹார்மோன்கள் வேண்டிய அளவு ரத்தத்தில் கலக்கின்றன. அந்த இரத்தம் நரம்புகளின் வழியே ஊடுருவிப் பாயும் போது எலும்புகளுக்கு நிறைய ஹார்மோன் கிடைக்கிறது. அப்பொழுது எலும்பு வளர உதவுகிறது. இது ஒரு முறை.

இரண்டாவது, சிரசாசனத்தில் நிற்கும்போது கீழ் முதுகெலும்பு சற்று சிரமபரிகாரம் எடுக்க முடிகிறது. சதா எந்நேரமும் கீழ் முதுகெலும்பு சகல பாரத்தையும் தாங்க வேண்டியதாய் இருக்கிறது. மேல் முதுகெலும்புகள் அத்தனையும் சொகுசாய் உட்கார்ந்து இருக்கின்றன. முதுகெலும்புகள் ஒரு கயிற்றில் மோதிரங்கள் கோத்தாற்போல இருக்கின்றன. ஒவ்வொரு வளையத்தின் இடையில் வாஷர்களைப் போலச் சதையிலான வாஷர்கள் தடுப்புக்களாக இருக்கின்றன. அதனால்தான் எவ்வளவு அழுத்தினாலும் எலும்புகள் ஒன்றுக் கொன்று உராயாமல் பாதுகாப்பாய் இருக்கின்றன. இந்த அழுத்தத்தினால் இடையிலுள்ள சதைகளும் சதா அழுத்தினவாறே இருக்கும். சிரசாசனம் செய்யும்போது இந்தத் தடுப்புச் சதைகளுக்கும் விச்ராந்தி ஏற்படுகிறது. சொகுசாய் உட்கார்ந்து கொண்டிருந்த மேல் முதுகெலும்புகளுக்கும் சதைத் தடுப்புகளுக்கும் இப்பொழுது அழுத்தம் உண்டாகிறது. ஆகவே வேலை இல்லாதிருந்தவைகளுக்கு வேலையும், அதிக வேலை செய்து கொண்டிருந்தவைகளுக்கு ஓய்வும் கிடைக்கிறது. அப்பொழுது என்ன நடக்கும்! இரண்டு பங்கு வேலை நடக்கும். சொகுசாய் இருந்த பாகம் அழுத்தப்பட்டு சுறுசுறுப்படைந்து வேலை செய்யும். அதிக வேலை செய்த பாகம் ஓய்வெடுத்தவுடன் பிறகு சாதாரண நிலைக்கு வந்த பின் அதுவும் சுறுசுறுப்பாக வேலை செய்யும். அப்படி வேலை செய்யும்போது அதன் வழியே செல்லும் நரம்புகளும் புத்துணர்ச்சி அடைந்து அதனதன் வேலையைச் சரிவரச் செய்யும். இம்முறையும் வளர்ச்சிக்கு உதவுகிறது.

வயதானவர்களுக்கு எலும்புகள் எல்லாம் உறுதிப்பட்டுக் கெட்டியாய் இருக்கும். அவர்கள் சிரசாசனம் செய்வதால் இன்னமும் எலும்புகள் உறுதியாகி நன்றாய் ஆரோக்கியமாய் இருக்குமே யன்றி, எலும்பு வளர்வதற்கு இடமில்லை. இதை யறியாமல் விளம்பரங்களைப் பார்த்துக் கண்டபடி மருந்துகளை விழுங்கிப் பல கேடுகளை அடைகின்றனர். உயரமாக வளர்வதற்காக விளம்பரம் செய்யப்பட்டிருக்கும் மருந்துகளிலெல்லாம் பிட்யூடரியின் ஹார்மோன் கட்டாயம் சேர்ந்தே யிருக்கும். இவைகள் எல்லாம் தனிப்பட வாறுமே



தகப்பனார்:—ஏண்டா! கையெல்லாம் இவ்வளவு அழுக்கா இருக்கு?
பையன்:—முகத்தை அலம்பிக் கொண்டேனப்பா! அதனாலேதான்.



பிரிட்டனிலுள்ள இளைஞர்களுக்கு நவநவமான முறையில் பல புதுமைகளுடன் கூடிய மாதிரி விமானங்களைச் செய்து பறக்க விடுவது ஒரு பொழுது போக்கு. ஓய்வு நேரங்களில் வீண் அரட்டையடிப்பதில் காலத்தையும் கவனத்தையும் செலவிடாமல் அந் நாட்டுச் சிறுவர்கள் ஆராய்ச்சி மிகுந்த இத்தகைய நுண்ணறிவுக் கலை விளையாட்டுக்களில் ஈடுபடுகிறார்கள். இப்பொழுது சின்னச் சின்ன விமானங்களைப் பல புது முறைகளில் செய்து பழகும் இளைஞர்கள்தான் வருங்காலத்தில் இயந்திர சாஸ்திர விற்பன்னர்களாகவும், கைதேர்ந்த விமானிகளாகவும், ஈடு இணையற்ற இன்ஜினியர்களாகவும் திகழ்வார்கள். ஓய்வு நேரங்களை வீணாக்காமல் இயந்திரக் கலையைப் பயில வேண்டும் என்ற ஆசையும் ஆர்வமுள்ள ஆங்கிலேய வாலிபர்களைப் போல் நம் இந்திய நாட்டு இளைஞர்களும், ஊக்கத்துடன் இத்தகைய அறிவுக் கலை விளையாட்டுக்களில் ஈடுபட்டால் நம் நாடு விரைவில் முன்னேற்றம் அடையும்.

---

உபயோகிக்கக் கூடாது. டாக்டர்களின் மேற்பார்வையில்தான் உபயோகிக்க வேண்டும். ஏதாவது மாறுதல் ஏற்பட்டால் உடனே டாக்டர்கள் மருந்தை நிறுத்தி விட்டு அதற்கு மாற்று செய்வார்கள். தன்னிச்சையாய் விளம்பரங்களைப் பார்த்து மருந்துகளைச் சாப்பிட்டு, மார்புப் படபடப்பு, தளர்ச்சி மயக்கம், நரம்பிழுப்பு, பிரக்ஞையை இழத்தல் போன்றவைகளை எத்தனையோ பேர் அடைந்திருக்கின்றனர் என்று டாக்டர்களே ஒப்புக் கொள்கின்றனர்.

இப்பேர்ப்பட்ட மருந்துகளை உபயோகித்து வாழ்க்கையையே பாழாக்கிக் கொள்வதற்குப் பதில் சிரசாசனம் செய்தால் இத்தகைய பயத்திற்கும் இடமில்லை யல்லவா! மருந்து உபயோகிப்பதனால் மற்றும் பல கெடுதிகள் ஏற்படலாம். சிரசாசனம் செய்வதனால் அப்படி ஒரு கெடுதலுக்கும் இடமில்லை. அதற்குப் பதிலாகப் பல கெடுதல்கள் இருந்தால் போகும். இயற்கை வழிக்கும் செயற்கை வழிக்கும் உள்ள வித்தியாசம் இது தான். சிரசாசனம் இயற்கை வழி; மற்றவை யெல்லாம் செயற்கை வழி.

## பிரம்மச்சரியத்தைக் காப்பாற்ற வழி

இதற்கு யோகாசனத்தை விடச் சிரேஷ்டமானது வேறொன்றுமே கிடையாது. மகாத்மாஜிக்குப் பின் இதைப் பற்றிச் சொல்லுவார் யாருமே இல்லாமல் போய்விட்டார்கள். இத்தனைக்கும் அவர் முற்றிலும் பிரம்மச்சாரி அல்ல. நான்கு பிள்ளைகளுக்குத் தகப்பனார் ஆகி அதன் பின் பிரம்மச்சரியம் கைக் கொண்டார். பிரம்மச்சரியத்தைக் கலியாணம் ஆகாதவர்கள் தான் அனுசரிக்க வேண்டுமென்பதில்லை. கலியாணம் ஆனவர்களும் அவ்வப்போது இருபது நாள், நாற்பது நாள் மூன்று மாதம் என்று அனுசரிக்கலாம். அப்படி அனுசரித்துப் பாருங்கள். அதனுடைய பலன் நன்றாகத் தெரிய வரும்.

ஆனால் அதற்கு மனோ திடம் வேண்டுமே எனலாம். அதற்கும் ஆசனம் தான் உதவி செய்ய முடியும். உடலுக்கு மட்டும் நன்மை பயப்பதன்று. உடலுக்கு நன்மை பயப்பதின் மூலம் மனதுக்கும் நன்மையளிக்கும். பிரம்மச்சரியம் கைக் கொள்ளத் திடமான மனம், உறுதி, ஒருமைப் பாடு முதலியவை அவசியம். சலன சித்தம், எதிலும் சீக்கிரம் வயப்படும் தன்மை, சபல புத்தி முதலியவை களுள்ளவர்களால் பிரம்மச்சரியத்தை அனுசரிக்க முடியாது. யோகாசனம் செய்வதால் இந்த வேண்டாத குணங்கள் மாறித் திட மனதும், உறுதியும், ஒருமைப் பாட்டையும் அளிக்கிறது. அதற்காகத்தான் யோகிகளும் ஆசனத்தைக் கண்டுபிடித்தார்கள். பிரம்மசரியத்தைக் காப்பாற்ற ஆசனங்கள்தான் பேருதவி செய்யும்.

தாம்பத்ய வாழ்க்கையில் புகாதவர்கள் எல்லோரும் பிரம்மச்சாரிகளாவார்கள். இவர்கள் பிரம்மச்சரியத்தைக் காத்து உடலை உறுதியாக்கி

உலகத்தில் வாழப் பல சாஸ்திரங்கள் கற்க வேண்டியது கடமை. இதற்குப் பல விதிகள் உண்டு. பிரம்மச்சர்யம் ஆண் பெண் இரு பாலார்க்கும் உண்டு. அவரவர்களுக்குத் தனி விதிகள் உண்டு. பிரம்மச்சாரிகள் காரம், புளி முதலிய உத்தேஜன வஸ்துக்களை உபயோகிக்க கூடாது. பட்டாடைகளை உடுத்தக் கூடாது; பஞ்சணையில் படுக்கக் கூடாது. உடலுக்குச் சுகமளிக்கும் எந்த வஸ்துவையும் உபயோகிக்கக் கூடாது. வாசனைத் தைலங்கள், வாசனை சாமான்கள் உபயோகிக்கக் கூடாது. வாலிபப் பெண்களுடன் பழகக் கூடாது. ஆசிரியரால் கற்றுக் கொடுக்கப்படும் பாடங்களைத் தவிர, வேண்டாத புத்தகங்களைப் படிக்கக்கூடாது என்ற விதிகள் உண்டு.

ஆனால் நமது கண் முன்பு நடைபெறுவதென்ன! இப்பொழுது பிரம்மச்சாரிகள் எப்படி வளர்கிறார்கள்; அவர்களின் சூழ் நிலை என்ன! மேற் சொன்னவைகளில் ஏதாவது ஒன்றிலேனும் அனுசரிக்கின்றார்களா! இல்லை.

ஒரு கலாசாலையில் புத்தகக் கடையு மிருக்கிறது. சிகரெட் கடையு மிருக்கிறது. இதை அனுமதித்திருக்கிறார்களே கலாசாலை நிர்வாகிகள்! சிகரெட் கடையில் புத்தகக் கடையைவிடப் பத்துப் பங்கு வியாபாரம் நடக்கிறது. கல்வியின் ஆலயமாகிய கலாசாலையிலா இக்காட்சி! எத்தனை மாணவர்கள் கலாசாலை நாட்களில் பாடங்களைப் படிக்க வகுப்புகளுக்குப் போகாமல் சினிமா பார்க்கப் போகின்றனர். அவர்கள் உபயோகிக்காத நாகரிக சாமான்கள் இல்லை. சமையல் திட்டம் பிரம்மச்சாரிகளுக் கென்று தனியாக உண்டா! எல்லா வகையிலும் பிரம்மச்சரியத்தை நாசம் செய்து அஸ்திவாரத்தையே உளுக்கச் செய்து விடுகின்றனர். அதன் மேல் கட்டப்படும் இல்லற மாளிகை எப்படி உறுதியாய் அமைக்க முடியும்!

பிரம்மச்சர்யத்தையே கண்ணைப் போற்றும் நமது நாட்டிலுள்ள மாணவர்களே இக்கதி யென்றால் அமெரிக்கக் கலாசாலைகளிலுள்ள மாணவர்களின் போக்கு மிக விசித்திரமாய் இருக்கிறது. நம்மைவிட அவர்கள் பொருளாதாரத்தில், விஞ்ஞானத்தில், வாழ்க்கைத் தரத்தில், கைத்தொழிலில், வாணிபத்தில் பலவற்றிலும் மேலானவர்கள் என்று சொல்கிறோமல்லவா! அதைப் போல பிரம்மச்சர்ய மாணவர்களின் அட்டூழியமும் நம் நாட்டை விடப் பலபடி மிஞ்சியிருக்கிறது.

காமத்தீ வளர, எரியும் நெருப்பில் எண்ணெய் விடுவதைப் போலச் சகல விதத்திலும் சந்தர்ப்பங்களை அமைத்துக் கொடுத்து விட்டு, சமத்துவம், ஒற்றுமை, ஒருவர்க் கொருவர் அறிதல் என்று பெருமையாய் நாகரிகமாய்ப் பேசி வருவதனால் என்ன பயன்! முன் காலத்தில் குருகுல வாசங்களைத் தெரியாமலா ஏற்படுத்தினார்கள்! குருகுல வாசத்தில் சூரிய நமஸ்காரம், ஆசனங்கள், சந்தியா வந்தனம், பிராணாயாமம் முதலியவைகள் கட்டாய பாடமாயிற்றே! அவையெல்லாம் பிரம்மச்சரியத்தைக் காப்பாற்றும் கவசங்களல்லவா! இவைகளைக் கொண்டவர்களின் முகம் பிரம்மதேஜஸ்—ஜோதி மயமாய்த் திகழுமே! இன்று பௌடர், ஸ்னோ, முகங்களல்லவா காட்சியளிக்கின்றன! ஒட்டின கன்னங்கள், உள் சொருகின கண்கள், கூனல் முதுகு, கூண்டு மார்பு, புகைப் பிடித்துக் கருகிய உதடுகள், நரைத்த முடி, வெளுத்த முகம், தள்ளாடும் நடை முதலியவைகளுடன் தானே மாணவர்கள் காட்சியளிக்கின்றனர்.

நம் தேசத்து ஆசாரத்தை அனுசரித்து ஆண் பெண் இரு பாலார்க்கும் இவைகளெல்லாம் மறையவேண்டுமானால் தனித் தனிக் கலாசாலைகள் ஏற்பட வேண்டும். அதனுடன் பிரம்மச்சாரி மாணவர்கள் ஆசனங்களைக் கைக் கொண்டால் தான் ஆண்மையுடன் திகழலாம். ஒளிபடைத்த கண்ணும், உறுதி கொண்ட நெஞ்சமும் வலு படைத்த தோளும், தெளிவு கொண்ட மதியும் உண்டாகும். சூழ்நிலை எப்படியிருப்பினும் மாறுதிட மனதை அளித்துப் பிரம்மச்சரியத்தைக் காப்பாற்றுவது இந்த யோகாசனமே. அதிலும் முக்கியமாய் இந்தச் சிரசாசனமே யாகும். (தொடரும்)

சென்னை நகரில் 1847-ம் ஆண்டிலிருந்து தொழில் நடத்தி வரும் அகர்சந்த் மன்மல் கம்பெனியின் சொந்தக்காரர் ஸ்ரீ மோஹன்மல் சார்டியா கல்வி வளர்ச்சிக்குப் பல நன்கொடைகளை அளித்திருக்கிறார். சமீபத்தில் அவர் புதிய காலேஜ் ஒன்று ஸ்தாபிப்பதற்காக இரண்டு லட்ச ரூபாய் நன்கொடை அளித்தார். இந்த நன்கொடையைக் கொண்டு ஜெயினர் கல்விச் சங்கத்தார் 'அகர்சந்த் மன்மல் ஜெயின் கலாசாலை'யை ஏற்படுத்தி, அதைச் சென்னைக் கவர்னர் ஸ்ரீ பிரகாசாவைக் கொண்டு திறந்து வைத்தார்கள். ஜெயின் கலாசாலை என்று பெயர் இருப்பினும் இந்தக் கலாசாலையில் சாதி, மத, மாகாண வேற்றுமை யின்றி அனைவரும் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள். தியாகராஜ நகரில் தாற்காலிகமாக நடத்தப்படும் இக் கலாசாலை மீனம்பாக்கத்தில் முப்பது ஏக்கரா நிலத்தில் கட்டப்படப் போகும் சொந்தக் கட்டிடத்துக்கு மாற்றப்படும்.



# "லக்ஸ் டாய்லட் சோப்
## என் சருமத்தை அழகுடையதாக வைத்துக்கொள்கிறது" என்று சொல்கிறார்

*ஏ. ஆர். சகுந்தலா*




இனிய மணத்துடன் கூடிய இந்த வெண்மையானதும் சுத்தமானதுமான சோப் உங்கள் சருமத்தை வசீகரமாகச் செய்யும்!

**சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்**

LTS. 332-X30 TM

# ராதை ரஸிகையானாள்

**விமலன்**

“ராதை, என் கற்பனையை எல்லாம் திரட்டி...” என்று கனைத்துக் கொண்டே ஆரம்பித்தேன்.

“குப்பைக் கூடைக்கு அர்ப்பணம் செய்யப் போகிறீர்களோ ...?”

ராதையின் ‘வெடுக்’கென்ற கேள்வி என் ஆத்திரத்தைக் கிளப்பியது.

“அதிகப் பிரசங்கி! சொல்வதைக் கேள். அதியற்புதமான, மர்மச் சுழல்கள் நிறைந்த, காதல் ததும்பி வழிகின்ற ‘தெய்வீகக் காதல்’ என்ற என் கதையைப் படித்தாயே, அது எப்படியிருக்கிறது?”

“அதியற்புதமாக இருக்கிறது. காதல் ததும்பி வழிகிறது...”

“அப்படியென்றால்...?”

“அது எப்படிப் பிரசுரமாயிற்று என்பது தான் மர்மமாக இருக்கிறது!”

“ராதை, நீ பேசக் கற்றுக்கொண்டு விட்டாய்! கதாநாயகி கமலவதனி காதலனைத் துறந்து...”

“கத்தரிக்காய்க் கறி கருகிக்கொண்டிருக்கிறது. உங்களோடு காதலையும் கதையையும் ரசிக்கச் சாவகாசமாக வருகிறேன்...!”

‘விடுவிடு’ என்று சமையற் கட்டுக்குச் செல்லும் ராதையை அப்படியே கொன்று விடலாமா என்று தோன்றியது. சே! இலக்கிய ரசனையே இல்லாத ஒரு பெண்ணோடு எப்படி ஒரு எழுத்தாளன் வாழ்வது?

என் இலக்கிய உள்ளத்துக்கும் மேலாக இட்டிலியையும், கதைகளுக்கும் மேலாகக் கத்தரிக்காய்க் கறியையும் மதிக்கும் இந்த ராதையோடா வாழ்க்கை நடத்துவது...?

என் எழுத்தாள உள்ளத்திலே எழுந்த வேதனையை எழுதி முடியாது. கதாநாயகர்களைப் போல மனம் சிந்தனைச் சுழலிலே சுழல ஆரம்பித்து விட்டது.

“சாப்பிட வருகிறீர்களா?” என்று புடவைத் தலைப்பில் ஈரக் கையைத் துடைத்துக் கொண்டே என்னைக் கேட்டாள் ராதை.

“சாப்பாடு, சாப்பாடு, சாப்பாடு! சதா சாப்பிடுவதற்குத்தானா மனிதன் உலகில் பிறந்தான்?”

“இன்று என்ன உங்களுக்கு? வேதாந்தம் பேசிக்கொண்டு தத்துவ ஆராய்ச்சியில்...”

“வாயை மூடு! பேசினால்...”

ராதை நடுங்கிப் போய் விட்டாள். அவள் கண்களில் முட்டி நின்ற நீரைக் கண்டும் என் வீர மனம் கலங்கவில்லை!

“அப்படியானால் என்னை என்னதான் செய்யச் சொல்கிறீர்கள்?”

“அப்படி வா, வழிக்கு! கேளு ராதை, இலக்கிய ரசனை இல்லாத உன்னோடு வாழ என் எழுத்தாள உள்ளம்...”

“இலக்கிய ரசிகையாக இருக்க வேண்டும். அவ்வளவுதானே?”

“என் கதைகளை நீ ரசித்தே ஆக வேண்டும். மற்றும் பல நவீன நவயுக எழுத்தாளர்களின் கதைகளையும்...”

“கண்டிப்பாக ரசிக்கிறேன். நீங்கள் சாப்பிட வருகிறீர்களா ...?”

“தாராளமாக!”

ஒவ்வொரு வாய் சாதத்துக்கும் ஒவ்வொரு பிரபல நவீனங்களையும் அதன் ஆசிரியர்களையும், அவளுக்கு அறிமுகப்படுத்தினேன்.

என்ன மாறுதல்!

நாளொரு நாவலும், பொழுதொரு சிறு கதையுமாகப் படித்து முடித்தாள் ராதை. அறுபது நாழிகைக்கும் அறுபத்து ஆறு சஞ்சிகைகளைக் கரைத்துக் குடித்தாள்!

“ராதை, காப்பி ஆகிவிட்டதா?”

“இருங்கள், இந்த அழகான வர்ணனையைக் கேளுங்கள். அவளது முத்துச் சுடரொளி வீசும் மோகனப் புன்னகை......”





டாக்டர் :—ஸார், நேற்று பரிசோதனை பண்ணுவதற்கு உங்களுடைய தலையை எக்ஸ்ரே எடுத்துப் பார்த்தோமல்லவா? அதனுடைய ரிஸல்ட் தெரிந்து விட்டது.

நோயாளி (ஆவலுடன்) :—என்ன ஸார், என்ன?

டாக்டர் :— கவலைப் படாதீர்கள். ஒன்றுமில்லை!

நோயாளி :—ஒன்றுமில்லையா?

டாக்டர் :—ஆமாம். உங்கள் தலைக்குள்ளே ஒன்றும் இல்லை!'

---

"புடலங்காய்! காப்பி ஆகிவிட்டதா என்று கேட்டால்?"

"இது அவசியம் படித்து ரசிக்கவேண்டிய நாவல். நடுவில் விட்டுவிட மனம் வரவில்லை. அரைமணி நேரம் கழித்து......"

"அரைமணியா? இப்போதே மணி ஒன்பதுக்கு மேலாகி விட்டதே..."

"நீலநிற வான மண்டலத்திலே நீந்திய..."

"விளையாடாதே, ராதை!"

"அவனது வட்டக் கரிய விழி மலர்களில்......"

"ஏய், ராதை! கொஞ்சம் காப்பியாவது கொடு. சாப்பாட்டை ஹோட்டலில் வைத்துக் கொள்ளுகிறேன்!" என்றேன் அழமாட்டாக் குறையாக.

"கொஞ்சம் கேளுங்கள். நிலவொளியின் தங்கப் பூச்சிலே பொன்னாக அந்த மண்டபம்......"

"மண்ணாங்கட்டி!"

புத்தகத்தைப் பிடுங்கித் தூர விசிறியெறிந்தேன், கடைசியாக.

"சே! இவர் எழுத்தாளராம். இலக்கிய ரசனை இல்லாத......" என்றாள் ராதை.

காரியாலயத்திலிருந்து திரும்பிவர வெகு நேரமாகிவிட்டது. வழக்கம் போலச் சமையல் அறையில் ராதையைக் காணவில்லை. பசியும் கோபமும் என்னை வதைத்துக் கொல்ல ஆரம்பித்து விட்டன. அறையில் எதையோ வெகு மும்முரமாகப் படித்துக் கொண்டிருந்தாள் ராதை!

"ராதை!"

"உங்கள் 'கோமளாங்கியின் மணாளன்' என்ற கதை இருக்கிறதே, அது ...!"

"ராதை!" என்றேன் கோபத்துடன்.

"...உங்கள் உன்னத சிருஷ்டி! அபார வர்ணனை! நடை நயத்தையோ கேட்கவே வேண்டாம்!"

"அதை அப்புறம் படியேன்!"

"இன்னும் இரு நூறே பக்கத்தில் 'காதல் சிகரம்' என்ற......"

"சரி, சமையல் ஆகிவிட்டதோ?"

"ஐயையோ! சமையலா? மறந்தேபோய் விட்டேனே! புத்தகத்தை ரசித்ததில் உங்களைப் போல வீட்டையே மறந்து விட்டேன். நீங்கள்தான் அடுப்பை மூட்டி......"

மீண்டும் புத்தகம் படிப்பதில் மூழ்கி விட்டாள் ராதை!

அவளைப் போலவே 'விடு விடு' என்று சமையற்கட்டுக்குப் போய் அடுப்பைப் பற்ற வைத்தேன். தகர டப்பாக்களும் கண்ணாடி பாட்டில்களும் உருண்டு புரண்டு உடைந்து புலம்பின. சமையல் அறைக்கு ராதை வரவேயில்லை. ஒரு வழியாகச் சாதத்தை மட்டும் வெந்ததும் வேகாததுமாகப் பொங்கி விட்டு மோரை ஊற்றிக் கொண்டேன். கை அலம்பிக் கொண்டு நான் சமையல் அறைக்கு வந்த போது தூக்கி வாரிப் போட்டது.

ராதை கம்பீரமாக என் சமையலை ரசித்துக் கொண்டிருந்தாள்!

"வெட்கமில்லை! பெண்ணும் இவள்..."

"உங்கள் இலக்கியங்களை ரசித்ததில்..."

"உன் ரசனையும் நீயும்! வேளை, காலம் பாராமலா வேண்டிக் கிடக்கிறது ரசனை?"

"நீங்கள் மட்டும் வேளையும் காலமும் பார்த்தா ரசித்தீர்கள்? வேளை பார்த்தா உங்கள் கதைகளை ரசிக்கும்படி கட்டாயப் படுத்தினீர்கள்?..."

"அதற்காகச் சமையல் சாப்பாடு இல்லாமல் நான் வேலைக்குப்போகும் வேளையில் நீ இலக்கியத்தில் ஆழ்ந்து விட்டால்...?"

"நான் சமையல் உள்ளில், கல் உரலோடும் வேகாத உருளைக் கிழங்கோடும் அவதிப்படும் போது நீங்கள் காதலையும் கதையையும் கேட்கக் கூப்பிட்டால்...?"

எனக்குத் திடீரென்று ஞானோதயம் உண்டாகி விட்டது. ஆணுக்கு ஒரு நீதி, பெண்ணுக்கு ஒரு நீதியா? அவள் வீட்டு வேலையைக் கெடுத்து, என் கதைகளை ரசிக்கும்படி கட்டாயப் படுத்தியது தவறுதான்; எனக்குக் காரியாலயம் இருப்பது போல்தானே அவளுக்கு வீட்டு வேலையும்?

"போனது போகிறது. நீ பழைய ராதையாகவே இரு. என் ராதைக்கு இலக்கிய ரசனையே வேண்டாம்!"

கதைகளில் வரும், 'நீல வானத்திலே நீந்தும் நிலவின் நிர்மலமான ஒளி' நடு முற்றத்தை வெள்ளிமயமாக்கிக் கொண்டிருந்தது.

"வேளையும் காலமும் பார்த்துக் கேட்கிறேன் ராதை! நாம் இப்போது எதை ரசிக்கலாம்?" என்றேன். ராதை சிரித்தாள். நானும் சிரித்தேன். அப்புறம் என்ன? இருவரும் ஏக காலத்தில் சேர்ந்து சிரித்தோம்.




டி. கே. சி.

## 6. பயமாவது ஒன்றாவது !

மனுஷனுக்கு நாடகம் என்றால் ஒரே ஆசை. பார்ப்பதற்கு நாடகம் இல்லையென்றால் மனசே நாடகத்தைச் சிருஷ்டித்துக் காட்டும். பகல் கனவில் காட்டும், பக்கா கனவிலும் காட்டும்.

தென்னை மரத்தையும் ஆல மரத்தையும் பேசச் செய்து நாடகம் காட்டும். நரி, பூனை இவைகளைப் பேசச் செய்தும் காட்டும்.

அப்படியானால் சம்பந்த மில்லாத ஏதோ இரண்டு புலவர்களைச் சந்திக்கச் செய்து நடிக்கச் செய்கிற காரியத்தைப் பற்றி அதிசயிக்க வேண்டியதில்லை.

⁂

ஒட்டக்கூத்தர் ஒரு காலத்தில் உள்ளவர். புகழேந்தி வேறொரு காலத்தில் இருந்த புலவர். இருவருக்கும் சம்பந்தம் கிடையாது. ஆனாலும் சம்பந்தப் படுத்தி விட்டார்கள் பிற் காலத்துப் புலவர்கள்.

அந்த இரண்டு புலவர்களையும் இரண்டு ராஜாக்களுக்குப் பிரித்துக் கொடுத்து விட்டார்கள். ஒட்டக் கூத்தரைச் சோழனுக்குக் கொடுத்தார்கள். புகழேந்தியை 'நீ வைத்துக் கொள்' என்று பாண்டியனுக்குக் கொடுத்தார்கள்.

இனி வருகிறது நாடகம் :—

பாண்டியன் தன் மகளைச் சோழ மன்னனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்தான். சீதனங்கள், பல்லக் கென்ன, யானை என்ன, குதிரை என்ன, தங்கப் பாத்திரங்கள் என்ன, ரத்னகசிதமான நகைகள் என்ன, எல்லாம் போயின. புகழேந்திப் புலவரையும் சீதனமாக அனுப்பினான்.

மதுரையை விட்டு உறையூர் போய்ச் சேர்ந்தார் புகழேந்திப் புலவர். சோழ மன்னன் பலவித உபசாரங்களோடு புலவரை வரவேற்று அன்பாக நடத்தி வந்தான். புலவர் காரியம் சௌகரியமாகவே இருந்தது.

ஆனாலும் ஒட்டக்கூத்தருக்குப் புகழேந்திப் புலவர் மேல் பொறாமை உண்டா

விற்று. மன்னனிடம் கோள் சொல்லி எப்படியோ புகழேந்திப் புலவரைச் சிறையில் அடைக்கும்படி செய்து விட்டார்.

சிறையில் இருக்கும்போது பல சிறைவாசிகளோடு பழக நேர்ந்தது புகழேந்திப் புலவருக்கு. அவர்களுக்கெல்லாம் தமிழைக் கற்பித்தார். கவிஞர்களாகவே ஆக்கி விட்டார் அவர்களை.

இப்படிப் பள்ளிக்கூடம் போட்டது யாருக்கும் தெரியாது. ஒட்டக்கூத்தருக்கும் தெரியாது.

இந்த நிலையில் மன்னனுடைய பிறந்த நாள் வந்தது. பிறந்த நாள் அன்று கவிஞர்களாக உள்ளவர்களையெல்லாம் சிறையில் இருந்து விடுவிப்பது பிறந்த நாள் கொண்டாட்டத்தில் ஒரு காரியம்.

சிறைவாசத்தில் உள்ளவன் கவிஞன் தானா என்று சோதிப்பது ஒட்டக்கூத்தருடைய பொறுப்பு.

தர்பார் நடக்கிறது. சிம்மாசனத்தில் மன்னன் வீற்றிருக்கிறான். அருகில் ஒட்டக்கூத்தரும் இருக்கிறார்.

அப்போது தெரிய வந்தது புகழேந்திப் புலவருடன் சிறையில் இருப்பவர்கள் எல்லாரும் புலவர்களாகவே ஆய் விட்டார்கள் என்ற விஷயம்.

"அப்படியா?" என்று ஒட்டக்கூத்தர் ஏளனமாகச் சொல்லிச் சிறைவாசிகளை ஒவ்வொருவராகத் தம் முன் வரச் சொன்னார். கேள்வி கேட்டார். சரியான விடை எல்லாரும் கொடுத்தார்கள். விடுதலை அடைந்தார்கள்.

கடைசியாக ஒரு குசவன் வந்தான். அவனைப் பார்த்து ஒட்டக்கூத்தர் கேட்டார்.

"தமிழை எல்லாம் கரை கண்ட என் முன் வருகிற நீ யார்?" என்று கேட்டார்.

"மோனை முத்தமிழ்
மும்மத மும்பொழி
யானை முன்வந் (து)
எதிர்த்தவன் யாரடா"

என்று ஒட்டக்கூத்தர் கேட்டார். குசவன் தன் தொழிலுக்கு ஏற்ற முறையில் பாடல் பாடினான்.

"கூனையும் குட
முங் குண்டு சட்டியும்
பானை யும்பண் ணும்
அங்குசப் பையல்யான்"

யானையை அடக்குவதற்கு அங்குசம் என்ற தொறட்டிதான் ஆயுதம். ஒட்டக்கூத்தரே, நீர் யானை என்றால் நான் அங்குசம் (அங்குசப் பையல்) என்றான் குசவன். நிலைமை அப்படி வந்து நின்றது. சங்கடப்பட்டுப் போனார் ஒட்டக்கூத்தர். குசவனுக்கு விடுதலை கிடைத்தது.

* * *

கவிஞர் ஒருவரும் அந்தச் சிறையில் இருந்தார். அவரை அழைத்துக் கொண்டு வரும் படியாகச் சொன்னான் அரசன். ஆடை ஆபரணங்கள் தரித்து வருவதில் கொஞ்சம் தாமதம் ஆய்விட்டது கவிஞருக்கு. இரண்டாவது ஆள் போய்க் கவிஞரைக் கூப்பிட்டான். வந்தார் கவிஞர்.

"ஒட்டக் கூத்தருக்குப் பயந்து பின் வாங்கி நின்று விட்டீரோ?" என்று கேட்டான் அரசன். பதில் சொன்னார் கவிஞர்:

"சோழ மன்னனே! நீர் மன்னர் மன்னனாகிய சக்கரவர்த்தி. நீர் இருக்கிற காரணத்தால் மன்னர்கள் ஒழிந்தா போனார்கள்?

"தாமரைப் பூ பிரமாதம்தான். ஆனாலும் சின்னஞ் சிறு பூவான கொட்டிப் பூவும் தாமரைப் பூவின் பக்கத்தில் பூத்துத்தானே நிற்கிறது?

கோக் கண்டு மன்னர்
குரைகடற் புக்கிலர்,
கோகன கப்
பூக் கண்டும் கொட்டியும்
பூவா தொழிந்தில,—
பூமுழு தும்
காக்கின்ற வேந்தர்வேந்
தேஒட்டக் கூத்தன்தன்
கட்டுரை யாம்
பாக்கண் டொளிப்பர்க—
ளோகவி பாடும்
பாவல ரே.

[கோக் கண்டும்: சக்கரவர்த்தியாகிய உன்னைக் கண்டும்; மன்னர் குரைகடல் புக்கிலர்: சாமானிய மன்னர்கள் அலைகளோடு சப்திக்கிற சமுத்திரத்தில் போய் விழுந்து விடவில்லை; கோகனகப் பூக் கண்டும்: செந்தாமரைப் புஷ்பத்தைக் கண்டும்; கொட்டியும் பூவாது ஒழிந்தில: கொட்டிப் பூ கூடப் பூத்துப் பக்கத்தில் நிற்கத்தான் செய்கிறது; பூமுழுதும் காக்கின்ற வேந்தர் வேந்தே: உலகத்தை யெல்லாம் காத்து வருகிற ராஜாதி ராஜனான சோழ மன்னனே!

ஒட்டக் கூத்தன் தன்: இந்த ஒட்டக் கூத்தனுடைய; கட்டுரையாம் பாக் கண்டு: சொல்லைச் சேர்த்துச் செய்கிற செய்யுளான பாடல் என்று சொல்லுவதைக் கண்டு; ஒளிப்பர்களோ கவி பாடும் பாவலரே: உண்மையான கவியை அனுபவித்துப் பாடுகிற கவிஞர்கள் பயந்து ஒளிப்பதென்பதும் உண்டா?]

ரஸமான நாடகம்தான். புலவர் சரித்திரம், காலம், தேச வர்த்தமானங்களைப் பற்றிக் கவலைக்க வேண்டாம்.



கால்கேட் பேபி பௌடர்
குழந்தையின் மென்மையான
சருமத்திற்குச் சிறந்தது.
வெகு எளிதில் எரிச்சல் உண்டாகும் உங்கள் குழந்தையின் மென்மையான சருமத்திற்கு, உற்சாகமும், சுகத்தையும் அளிக்கும் கால்கேட் பொரேடெட் பேபி பௌடர் மிகவும் அவசியம். அதன் மிக நேர்த்தியான சேர்க்கையால் எரிச்சலும், வேர்க்குருவும் வரவொட்டாமல் தடுக்கப்படுகிறது.
பெரிய சைஸ் டின்னை வாங்கிப் பணத்தை மிச்சப்படுத்துங்கள்!
ஓர் கால்கேட் உயர்ந்த ரகச் சரக்கு.
COLGATE
BORATED
BABY POWDER




ROBINSON'S
PEARL
BARLEY
சிறந்தது
சகல உபயோகங்களுக்கும்
கஞ்சி, கூழ், பாயசம், கறி, பார்லித் தண்ணீர் இவைகளுக்கு புதிய ருசிகரமான சத்துள்ள பேர்ல் பார்லி மிகச் சிறந்தது.
இப்போது எங்கும் கிடைக்கும்
அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட்
தபால் பெட்டி 664, கல்கத்தா-1.
ARPX-1TM



## நீங்கள் இன்று உங்கள் பற்களை மக்ளீன் செய்தீர்களா?

ஆம்! இளமும் அவள் இருதடவை மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையை உபயோகிக்கிறாள். அவள் பற்கள் எவ்வளவு அழகாயிருக்கின்றன பாருங்கள்.

மக்ளீன் பெராக்ஸைட் பற்பசை உங்களுக்கும் கூட வசீகரமான புன்னகையையும், வெண்மையான பற்களையும், இனிய சுவாசத்தையும் அளிக்கக் கூடியது. மக்ளீன் தயாரிப்பில் சேர்க்கப்பட்டுள்ள பொருள்கள் ஈறுகளுக்கு வலுவளித்து அபாயகரமான புளிப்பு நீர்களை வாயிலிருந்து அகற்றி பற்களை வெண்மையாக்கி, சொத்தை பிடிக்காமல் தடுக்கிறது— எல்லாம் ஒரே சமயத்தில் தான்.

சிறந்த பற்பசைதான் உங்கள் பற்களுக்கு நல்லது. எனவே இன்றே மக்ளீன்ஸ் உபயோகிக்கத் துவக்குங்கள்.

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குக!**




MTY-2 TAM.

வியாபார விவரங்களுக்கு: ஜே.எல்.மாரிசன்,ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட் மஹாலக்ஷ்மி கோவிலுக்கு எதிரில், வார்டன் ரோட், பம்பாய் 26.




# அருவிக்கரை ஆசிரமம்

'சுதர்சன்'

மொழிபெயர்ப்பு ரா.வீ

## 16. யார் குற்றவாளி?

சகோதரா! இதைக் கேட்டதும் என் இருதயமே நொருங்கிவிட்டது. கல்யாண வீட்டில் திடீரென்று மணமகள் மரித்து விட்டால் என்ன நிலை ஏற்படும்? என் உள்ளத்தின் நிலையும் ஏறக்குறைய அதே நிலையைப் போன்றதாகிவிட்டது. ரூப்சந்தின் மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கும் விஷயத்தில் எனக்கு எள்ளளவும் நம்பிக்கை உண்டாகவில்லை. ஜனங்கள் காதைக் காட்டிலும் கண்கள்மீதுதானே அதிக நம்பிக்கை வைக்கிறார்கள்! ஆனால் நான் என் கண்களினாலேயே இந்தச் சம்பவத்தைப் பார்த்திருந்தால்கூட நம்பியிருக்க மாட்டேன். 'இது நம் கண் கோளாறாகவோ, புத்திக் கோளாறாகவோ தான் இருக்க வேண்டும். ரூப்சந்த் இப்படியெல்லாம் போகக்கூடியவர் அல்ல. இது ஒருபொழுதும் அவர் குற்றமாக இராது' என்றுதான் எண்ணுவேன். நான் எதை வேண்டுமானாலும் நம்பத் தயார். ஆனால் ரூப்சந்த் கொலை செய்திருப்பார் என்னும் விஷயத்தை மட்டும் சிறிதும் நம்பத் தயாராயில்லை. எனக்கு என்னவோ அது நம்பத்தகாத காரியமாக, நடக்கக் கூடாத காரியமாகத்தான் பட்டது.

ஆனால் எனக்கு நம்பத் தகாத காரியமாகப் பட்டது என்பதனால் மட்டும் என்ன ஆயிற்று? அதற்காக ரூப்சந்தை யாராவது விட்டுவிடப் போகிறார்களா? அல்லது என்னால்தான் அவருக்கு விடுதலை வாங்கி அளித்து விட முடியப் போகிறதா?

வழக்கு ஆரம்பமாகியது. அந்த வழக்கு அமெரிக்கா முழுவதையும் ஒரே பரபரப்பில் ஆழ்த்திவிட்டது. ரூப்சந்த் கலிபோர்னியாவுக்குப் போய் அதிக நாட்கள் ஆகிவிடவில்லை. ஆனால் அவர் தம்முடைய இனிமையான பேச்சு, தூய நடத்தை, ஆன்மீக அறிவு இவற்றின் பலத்தைக் கொண்டு மக்களின் மனத்தை மிகவும் கவர்ந்திருந்தார். செய்தித் தாள்கள் 'பாரதிய மகாத்மா' என்று அடை மொழி அளித்து அவரைக் கௌரவித்தன. நியூயார்க் நகரத்திலேயே மிக மிகச் செல்வாக்கு வாய்ந்த செய்தித் தாளான டிரிப்யூன் கூட அவருடைய அநேக சொற்பொழிவுகளைப் பிரசுரித்ததோடு மட்டும் நிறுத்திக் கொள்ளாமல் அவரைப் பாராட்டிப் பல பத்திகளும் எழுதியிருந்தது. '... ஆனால் பிரும்ம ரிஷி!' என்று வசிஷ்டர் வாயிலிருந்து வெளி வந்தால் எவ்வளவு பெருமையோ, அதைக் காட்டிலும் பன்மடங்கு பெருமை அளிக்கக்கூடியது, நியூயார்க் டிரிப்யூன் புகழ்ந்து எழுதுவது. அந்தப் பத்திரிகையே அவரைப் பற்றிப் பத்தி பத்தியாகப் புகழ்ந்து எழுதியிருந்தது என்றால் அவருடைய பெருமை அந்நாட்டவர்களிடையே எவ்வளவு தூரம் உயர்ந்திருக்க வேண்டும் என்பது தெரிகிறதல்லவா? மக்கள் அவரைத் தர்ம குருவாகவே மதித்து வந்தனர்.

கோரக் கொலையைப் பற்றிய செய்தி காட்டுத் தீயைப்போல நொடிப்பொழுதில் நகரம், நாடு எங்கும் பரவி விட்டது. நான் என்னால் இயன்றவரை பல முயற்சிகள் செய்து பார்த்தேன். ஆனால் என்ன செய்து என்ன? பலன் பூஜ்யம்தான். நியாய ஸ்தலத்தில் நடைபெற்ற நடவடிக்கைகளைக் கண்டு என் இருதயம் இருளில் அடைந்து புழுங்கியது. இருளிலிருந்து விடுபடுவதற்கு நம்பிக்கையின் ஒளிக் கதிர் ஒன்றுகூடத் தென்படவில்லை. வழக்கோ மிக மிகத் தெளிவாயிருந்தது. அதில் எவ்விதச் சிக்கலும் இல்லை. கொலையுண்ட பெண் கலிபோர்னியாவிலேயே மிகப் பிரசித்தி வாய்ந்த வியாபாரி ஒருவரின் மகள். அவள் ரூப்சந்திடம் தன் மனத்தைப் பறிகொடுத்து விட்டாளாம். அவளுக்கு அவர்மீது உயிர் என்றால் உயிர், அவ்

வளவு காதல் ஏற்பட்டு விட்டதாம். அந்த அன்பு அவனை அவருக்கு அடிமையாக்கி விட்டது. ஆகவே, அடிக்கடி அவன் அவருடைய ஆனந்த பவனத்துக்குப் போய் வரலானான். தினம்போல, அன்றைக்கும் அவன் அங்கே போயிருந்தானாம். ஆனால் அன்றைக்கு அவன் ஏனோ மிகவும் வாட்டமாக இருந்திருக்கிறான். அன்று மாலையில் தான் அந்தச் சம்பவம் நிகழ்ந்திருக்கிறது.

இதைப் பற்றிய வாக்குமூலத்தில் ரூப்சந்த் சொன்னதாவது :

அச்சமயம் நான் ஆசிரமத்துக்கு வெளியே உலாவிக் கொண்டிருந்தேன். திடீரென்று அறைக்குள்ளிருந்து மிகப் பயங்கரமான கூச்சல் வரவே, உள்ளே ஓடினேன். ஜானி கீழே தரையில் விழுந்து துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தான். அவனுடைய இருதயத்தில் பாதிக்குமேல் அதிகமாகக் கத்தி பதிந்திருந்தது. நான் அவனருகில் ஓடிச் சென்று இருதயத்தில் செருகி யிருந்த அந்தக் கத்தியை எடுத்தேன். அப்பொழுதுதான் என் உடை ரத்தத்தினால் நனைந்து விட்டது. இதற்குள்ளாகப் போலீஸார் வந்து கத்தியும் கையுமாக இருந்த என்னைப் பிடித்துக் கொண்டனர். இதைத் தவிர இது சம்பந்தமாக எனக்கு வேறு ஏதுவும் தெரியாது.

‘சகோதரா! எனக்கு ரூப்சந்தின் வாக்குமூலத்தின்மீது முழுக்க முழுக்க நம்பிக்கை ஏற்பட்டிருந்தது. அவர்மேல் சந்தேகப்படுவதற்கான முகாந்திரம் ஏதும் இருப்பதாக எனக்குத் தென்படவில்லை. ஆனால் நியாயஸ்தலத்தாருக்கு அந்த வாக்குமூலத்தில் நம்பிக்கை ஏற்பட வேண்டாமா? எனக்கு மட்டும் நம்பிக்கை ஏற்பட்டு என்ன பயன்? அவர்களுக்கு அவருடைய வாக்குமூலம் முழுப் பூசணிக்காயைச் சோற்றிலே மறைப்பதாகப் பட்டது. ஆகவே, வழக்கு மாதக் கணக்கில் நீண்டது. எத்தனை எத்தனையோ வாக்குமூலங்கள் வாங்கப்பட்டன; வாய்தாக்கள் போடப்பட்டன. வழக்கு முடியும் வழியாகவே தோன்றவில்லை. கடைசியில் ஒருவாறு தீர்ப்புக் கூறும் அந்த நாளும் வந்தது. அன்று நியாயஸ்தலத்தில் ஏகக் கூட்டம். என் போட்டால் என் விழாது என்பார்களே, அப்படிக் கூடி யிருந்தது! அமெரிக்காவில் உள்ள மிக மிகப் பிரபலமான நட்சத்திரங்களைக் காணக்கூட ஜனங்கள் இவ்வளவு கூட்டம் கூடி யிருக்க மாட்டார்கள்; பரபரப்புக் காட்டியிருக்க மாட்டார்கள். செய்தித் தாள்களின் நிருபர்கள் கையில் காமிரா சகிதம் வந்திருந்தார்கள். ரூப்சந்தைப் படம் பிடிக்க அவர்கள் பெரு முயற்சி எடுத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் ரூப்சந்தின் முகத்தில் கவலைக் கோடுகளோ, பயத்தின் குறிகளோ வருத்தத்தின் ரேகைகளோ லவலேசங்கூடத் தென்படவில்லை. அவருக்கும் அந்த வழக்குக்கும் யாதொரு விதமான சம்பந்தமும் இல்லாதது போலவே அவர் தோற்றமளித்தார். நான் அவரைப் பார்த்தேன். ஆனால் தலை நிமிர்ந்து நேருக்கு நேர் அவரை நோக்கும் துணிவு எனக்கு உண்டாகவில்லை. எல்லாம் என்னால் வந்த வினையாக இருக்கும் பொழுது துணிவு எப்படி உண்டாக முடியும்?

இதற்குள் ஜூரிகள் தங்கள் தீர்ப்பைத் தெரிவித்து விட்டார்கள். தீர்ப்பைக் கேட்ட மக்களுக்கு மூச்சே நின்றுவிடும் போலாகி விட்டது. உயிர் உதடுகள் வழியே வெளியேறி விட்டவர்கள் போல வாயைத் திறந்த வண்ணம் நின்றனர். எங்கும் மரண அமைதி நிலவி யிருந்தது.

“குற்றம் ருஜுவாகி விட்டதனால் குற்றவாளிக்குத் தண்டனை அளிக்கப்படுகிறது. கழுத்தில் கயிற்றைச் சுருக்கிட்டுக் குற்றவாளியை உயிர் போகும் வரை தொங்க விட வேண்டும் என்று உத்தரவிடுகிறேன்” என்று தீர்ப்பு அளித்தார் நீதிபதி.

அச்சொற்களைக் கேட்டதும் எனக்கு இருதயத்தில் இரும்பு ஊசியைக் காய்ச்சிச் செருகுவது போலிருந்தது. கால்களுக்கு அடியிலிருந்து பூமியே நழுவி ஓடுவது போலத் தோன்றியது. வானம் இடிந்து தலையில் விழுவதுபோன்ற பிரமை ஏற்பட்டது. எனக்கு உடலை என்ன செய்ததென்றே புரியவில்லை. தலை சுற்றவே தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டேன்.

இதே சமயம் கூட்டத்தைக் கிழித்துக் கொண்டு யாரோ உள்ளே நுழைந்தார்கள். அதன் பலனாகக் கூட்டத்திலே சிறிது சலசலப்பு ஏற்பட்டது. அடுத்த சில நொடிகளுக்கெல்லாம் ஒரு உருவம் நியாயாதிபதிக்கருகே போய் நின்றது. நாடகத்திலே வி[illegible]புக்குமேல் வியப்புகளை அளிக்கும் [illegible]களைக் கண்டுகொண்டு வருகிறோம். அதைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமாக வியப்பு அளிக்கக்கூடிய நிகழ்ச்சியை [illegible]த காட்சி



யிலேயே காண நேர்ந்து விட்டால் எப்படிப் பிரமிப்பில் ஆழ்ந்து வாய் அடைத்துப் போய் உட்கார்ந்திருப்பான்? அதேபோல் நான் அந்த உருவத்தைப் பார்த்துப் பிரமித்துத் திகைத்து நின்றேன். அந்த உருவம் யார், தெரியுமா? வேறு யாரும் இல்லை. சாக்ஷாத் தேவகியேதான்!

அவள் நேரே நியாயாதிபதிக்கு எதிரே போய் நின்று கொண்டாள். பிறகு மெதுவான, ஆனால் தைரியம் தோய்ந்த அழுத்தந் திருத்தமான குரலில், "இவர் குற்றமற்றவர். கொலை செய்தவள் நான். குற்றத்துக்கேற்ற தண்டனை பெறவேண்டியவள் நான். ஆகவே, இவருக்குத் தண்டனை அளிக்காதீர்கள். நடந்தது என்னவோ நரக் கொலைதான். அதற்காக நியாயத்தைக் கொலை செய்ய வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன்!" என்று ரத்னச் சுருக்கமாகச் சொல்லி முடித்தாள்.

அதைக் கேட்டதும் நியாயஸ்தலத்திலே ஏகப் பரபரப்பு ஏற்பட்டு விட்டது. மக்களின் கண்களில் நீர்கோத்து நின்றது. தங்கம் சூடேறி விட்டால் நீராக உருகி விடுகிறது. மக்களின் கண்களில் முட்டி நின்ற நீர் சாதாரண நீர் அல்லவே! தங்கம் வெள்ளி உருகி ஓடியதனால் உண்டான நீரும் அல்லவே! தங்கமான உள்ளத்து உணர்ச்சிகள் வடித்த உண்மையான கண்ணீர் அல்லவா? ஜூரிகள் கூடப் பிரமித்துப் போய் எழுந்து நின்று விட்டார்கள். சர்க்கார் தரப்பு வக்கீல் வியப்புத் தாளாமல் தம் தலையைத் தடவி விட்டுக் கொண்டார். ரூப்சந்த் தமக்கு அளிக்கப்பட்ட மரண தண்டனைத் தீர்ப்பைக் கேட்டுக்கூட அவ்வளவு கலங்கவில்லை. ஆனால் தேவகி சொன்ன சொற்கள் அவரை வாய்திறக்க வொட்டாமல் உதடுகளை உலர்த்தி விட்டன. பைத்தியம் பிடித்தவர் போல் அவர் தேவகியையே கண் கொட்டாமல் வெறித்துப் பார்த்தார்.

தேவகியைப் பார்த்து, "நீ யார்?" என்று கோர்ட்டார் அவர்கள் கேட்டார்கள்.

"நானா? குற்றவாளியின் மனைவி?"

அச்சொற்களைக் கேட்டதும் நியாயஸ்தலம் சிறிது நேரத்துக்கு ஸ்தம்பித்தே போய் விட்டது. யாருக்கும் என்ன பேசுவது என்று புரியவில்லை. எல்லோரும் வாய் அடைத்துப் போய் உட்கார்ந்திருந்தார்கள். கோர்ட்டார் அவர்களுக்கே கூட என்ன சொல்வது என்று புரியவில்லை. சிறிது நேரம் கழித்துக் கோர்ட்டார் அவர்கள் நியாயஸ்தலத்துப் போலீஸ் இன்ஸ்பெக்டரைக் கூப்பிட்டு, "வழக்கு வேறு விதமாக உருவெடுக்கும் போலத் தோன்றுகிறது. ஆகவே, உடனே இவளைச் சிறைப் படுத்துங்கள்!" என்று அவசரமான உத்தர விட்டார்கள்.

தேவகியின் கைகளுக்குக் காப்பு மாட்டப் பட்டது. அது அவளுக்குச் சிறைத் தண்டனையாகவா தோன்றியது? அவளுடைய மரணத்



துக்கு முன் அறிவிப்பாக அல்லவா அது மூண்டிருந்தது! ஆனால் தேவகி எதையும் பொருட் படுத்தினதாகத் தெரியவில்லை. அவன் முகத்தில் மகிழ்ச்சி தாண்டவமாடியது. பஞ்சத்தில் அடிபட்டவனுக்குப் புதையல் கிடைத்தால் எவ்வளவு சந்தோஷப் படுவான்? அவ்வளவு சந்தோஷம் அவன் முகத்திலே குமிழியிட்டுக் கொண்டிருந்தது. அந்த மகிழ்ச்சி முகத்தில் மட்டும் அல்ல; முகத்தில், கண்களில், உதடுகளில் அங்க செனிவுகளில் எல்லா வற்றிலுமே வெகு ஸ்பஷ்டமாகத் தெரிந்து கொண்டிருந்தது.

## 17. வெறி முற்றியது!

சகோதரா! தேவகி தன்னைத் தானே மரணத்தின் கையில் ஒப்படைத்துக் கொண்டு தன் கணவனை விடுவித்து விட்டாள். ஆனால் தேவகியின் அந்தச் செயல் ரூப்சந்துக்கு அவ்வளவு திருப்தியை அளிக்கவில்லை. அவர் அந்தச் சம்பவம் குறித்து மிகவும் மன வருத்தப்பட்டார். கடன் வாங்கியவன், தான் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்கத் தவணைக்கு மேல் தவணை கேட்டு நாட்களை முடிந்த மட்டில் ஓட்ட முயற்சிப்பான் அல்லவா? அது போல், வக்கீல்கள் அந்த வழக்கை எவ்வளவு முடியுமோ, அவ்வளவு நீட்டி முடியா வழக்காக்க முயன்றனர். அவர்கள் தொழிலே அது தானே? நியாய ஸ்தலத்தில் ஆரம்பம் தொட்டுப் பழைய படியும் 'அடியைப் பிடியடா, பாரத பட்டா' என்ற ரீதியில் அந்த வழக்கு ஆரம்பமாயிற்று. எப்படியாவது தேவகியை விடுவித்து விட வேண்டும் என்று ரூப் சந்த் விரும்பினர்; ஆனாப்பட்ட பாடுபட்டார். ஆனால் அந்தக் காரியம் அவ்வளவு சுலபமானதாக இல்லை. ஏனெனில் தேவகி, தானாகவே வலிய வந்து குற்றத்தை ஒப்புக் கொண்டிருந்தாள். அது மட்டும் அல்ல; தான் கொடுத்த வாக்கு மூலத்தில் தெள்ளத் தெளிய ஐயந்திரிபுக்கு இடம் இன்றி, தானே அந்தக் கொலையைச் செய்ததாகவும் அவள் ஒப்புக் கொண்டிருந்தாள். அவள் மேலும் அந்த வாக்கு மூலத்தில் கூறியதாவது:—

என் கணவர் என்னிடம் கோபித்துக் கொண்டு இங்கே வந்து விட்டார். என்னால் அவருடைய பிரிவுத் துயரைத் தாள முடியவில்லை. ஆகவே, அவரைத் தேடிக் கொண்டு நான் இங்கே வந்து சேர்ந்தேன். ஆனால் கணவருக்கெதிரே போய் நிற்க எனக்கு அவ்வளவு துணிச்சல் உண்டாகவில்லை. எங்களிடையே ஏற்பட்டிருந்த மனஸ்தாபம் கடுமையாக வளர்ந்திருந்தது. நேருக்கு நேர் இல்லா விட்டாலும் மறைமுகமாகவாவது அவரைத் தரிசிக்கும் பாக்கியம் கிடைக்கட்டுமே என்பதற்காக, நான் வேறு ஒரு இடத்தில் தங்கிக் கொண்டு அவரைப் பார்த்துப் போகலானேன். இப்படி யிருக்கும் பொழுதுதான் லூஸி என்பவள் அவரிடம் அடிக்கடி வந்து போவதை அறிந்தேன். அவளுடைய நடை, உடை, பாவனையிலிருந்து அவளுக்கு அவர் மீது அன்பு ஏற்பட்டிருக்குமோ என்ற சந்தேகம் என் உள்ளத்திலே எழுந்து வளர்ந்தது. என் கணவரின் காதலைப் பெற அவள் முயற்சிக்கிருள் என்பதை நினைக்கவே எனக்குச் சகிக்கவில்லை. நான் என் உயிரை வேண்டுமானாலும் கொடுக்கத் தயாரா யிருந்தேன். ஆனால் கணவரையும் கணவரின் அன்பையும் கண்களுக் கெதிரே விட்டுக் கொடுக்க நான் சிறிதும் தயாரா யில்லை. எந்தப் பெண்ணும் என் நிலையில் இருந்தால் என்னைப் போலவேதான் எண்ணியிருப்பாள். எந்தப் பெண்ணும் தன் கணவன் தன் கையை விட்டு நழுவி வேறு ஒருத்தியின் மையலில் மூழ்கி, அவளுடைய கைப் பொம்மையாக மாறி ஆடுவதைக் காண விரும்பமாட்டாள்; சகிக்கவும் மாட்டாள். பெண் உள்ளத்தின் தன்மையே இத்தகையது. நானும் ஒரு பெண்தானே? ஆகவே, என் கணவர் இன்னொருத்தியின் மோக வலையில் சிக்கப் போகிருர் என்பதை நினைக்கவே எனக்கு மனம் கூசிற்று. அதனால் என் உள்ளத்தில் வைஷம்ய விஷம் ஏறியது. என் மூளையும் மனமும் கொதிக்கத் தொடங்கின.

நான் இரண்டு ஒரு தடவை லூஸியைச் சந்தித்து அவளிடம் விவரத்தைச் சொல்லி அவளுடைய மனத்தை மாற்றக்கூட முயன்றேன். ஆனால் அவள் என் வார்த்தைகளைக் காதிலேயே வாங்கிக் கொள்ளவில்லை. 'நான்



குடுகுடுப்பைக்காரன்:—ஏதேனும் கிழிசல் கந்தை இருந்தால் கொடுங்கள்!

வீட்டுக்காரர்:—கிழிசலா! இன்னும் லாண்டரியிலிருந்து துணி வரவில்லை. வந்தவுடன் வேண்டியது தருகிறேன். போய் விட்டு வா.



வந்தவர்:—இருதயம் திடீரென்று பட, பட, பட என்று ரொம்ப வேகமாக அடித்துக் கொள்கிறது, ஸார்!

டாக்டர்:—எப்பொழுது அது மாதிரி அடித்துக் கொள்கிறது?

வந்தவர்:—முக்கியமாக உங்களிடம் வரும்போதெல்லாம் அப்படி அடித்துக் கொள்ளுகிறதுங்க!

---

'அவரைப் பிரிந்து வாழமுடியாது. அடைந்தே தீருவேன்' என்று அவள் தீர்மானமாக என்னிடம் சொல்லிவிட்டாள். அவள் சொற்களைக் கேட்ட எனக்கு ஏற்பட்ட சீற்றத்தைச் சொல்லி முடியாது. நான் கோபவெறியில் மதி கிறங்கி என் கணவரின் குடிசையை நோக்கிச் சென்றேன். அந்தக் கெட்ட நடத்தைக் காரியின் வண்ட வாளங்களை யெல்லாம் அவிழ்த்து விட்டு என் கணவரின் மனத்தை மாற்றிவிட வேண்டும் என்ற ஒரே எண்ணம் தான் அவர் குடிசையை நோக்கிச் செல்லும் சக்தியையும் துணிவையும் என் கால்களுக்கும் உள்ளத்துக்கும் அளித்தது.

ஆனால் நான் அங்கே போவதற்கு முன்பாகவே ஊர்வசி அங்கே போய் உட்கார்ந்திருந்தாள். அவள் என் கணவருக்கு வெகு அருகே உட்கார்ந்திருந்தாள். அதைக் கண்டதும் என் வெறி முற்றியது. நான் என் நிலை மறந்து ஆவேசத்தில் மேஜையின் மீதிருந்த கத்தியை எடுத்துக் கொண்டேன். அடுத்த கணம் ஒரே ஓட்டமாக அவளருகே ஓடி அவளுடைய மார்பில் ஓங்கிக் குத்தி விட்டேன். அவள் இருதயத்தில் அது ஆழப் பதிந்து விட்டது. அப்புறம்தான் என் வெறி அடங்கியது; கண்கள் திறந்து கொண்டன. 'என்ன காரியம் செய்து விட்டோம்?' என்று எண்ணிக் கதி கலங்கினேன். ஆனால் அதைப் பற்றி யெல்லாம் அப்பொழுது சிந்தித்துக் கொண்டிருக்க எனக்குப் பொழுது ஏது? என்ன விபரீதம் நேருமோ என்று எண்ணித் திகிலுற்ற நான், கடவுள் விட்ட வழி விட்டும் என்று அவ்விடத்திலிருந்து அந்த நிமிஷமே வெளியேறி வேகமாக ஓடி விட்டேன்.

தேவகியின் அந்த வாக்கு மூலம் நியாய ஸ்தலத்திலே மிகுந்த பரபரப்பை உண்டு பண்ணி விட்டது. கூடியிருந்த ஜனங்கள் தங்கள் தங்களுக்குத் தோன்றியவாறெல்லாம் 'கசமுச' வென்று பேசிக் கொண்டனர். சிலர், 'இந்த வாக்கு மூலம் முற்றிலும் உண்மையாகத்தானிருக்க வேண்டும். இவள் உண்மையை ஒப்புக் கொண்டு தன்மானத்தைக் காத்துக் கொண்டாள்; நியாயத்தின் நேர்மைக்குத் தலை பணிந்தாள்' என்று பேசிக் கொண்டனர். வேறு சிலர், 'இவள் இந்தியப் பெண்மணி யல்லவா? பாரத நாட்டுக் கலாசாரத்திலே ஊறித் திளைத்திருக்கும் இவள் தன் உயிரைக் கொடுத்துத் தன் கணவனைக் காப்பாற்றி விட்டாள். இதைத் தவிர இவளுக்கும் கொலைக் குற்றத்துக்கும் யாதொரு விதமான சம்பந்தமும் இருக்க நியாயம் இல்லை' என்று பேசிக் கொண்டனர். ஊர் வாயை மூட முடியுமா? அல்லது உலகத்தின் வாயைத்தான் கட்ட முடியுமா?

ரூப் சந்த் இவற்றை யெல்லாம் கவனித்துக் கொண்டுதான் இருந்தார். ஆனால் வாய் திறந்து ஒன்றும் பேசவில்லை. இந்த நிகழ்ச்சி அவருடைய பேசும் சக்தியையே பிடுங்கிக் கொண்டு விட்டதோ என்று தோன்றியது.

சூரிய வெப்பம் குளத்தின் நீரைச் சுண்டச் செய்து விடுவதனால் குளத்தின் தரை மட்டம் தெரியத் தொடங்குகிறது அல்லவா? அதே போல், பயங்கர ஏமாற்றம் ரூப்சந்தின் மன அமைதியைக் கெடுத்துக் குலைத்து விட்டது. அதன் பலனாக உள்ளத்தின் ஆழத்தில் உருவாகிக் கொண்டிருந்த உணர்ச்சிப் போர் தெள்ளத் தெளியத் தெரிந்தது. அவர் தேவகிக்காக அல்லும் பகலும் கண்ணீர் பெருக்கத் தொடங்கினார். வெளிக்கு அவர் எவ்வளவு வெறுப்பைக் காட்டிக்கொண்டு வெளியேறி வந்திருந்தாலும் உள்ளத்தில் அவளிடம் அவருக்கு அளவற்ற அன்பு இருக்கத்தான் செய்தது என்பது நிதர்சனமாகத் தெரிந்தது.

எப்படியாவது தேவகியைத் தப்புவித்து விட வேண்டும் என்பதற்காக அவர் தம்மால் இயன்ற முயற்சிகளை யெல்லாம் செய்து பார்த்தார். ஆனால் அவை அவ்வளவு பலனளிக்கக் கூடியவையாகத் தோன்றவில்லை.

அப்பப்பா! அந்தக் காட்சிதான் எவ்வளவு துயரம் தருவதாயிருந்தது! மனைவியோ மரணத்தின் திறந்த வாயில், தானே வலியப் போய் விழுந்து கொண்டிருந்தாள்! கணவனால் அவற்றை யெல்லாம் கையைக் கட்டிக் கொண்டு பார்த்துக் கொண்டிருக்க முடிந்ததே ஒழிய, ஒரு உதவியும் செய்ய முடியவில்லை. விதியின் சதியை என்னவென்று சொல்லுவது? ரூப்சந்த் உள்ளம் குமுறிக் கண்ணீர் வடிப்பதைத் தவிர வேறு என்ன செய்வார், பாவம்!

(தொடரும்)




வசுமதி ராமஸ்வாமி

அன்புள்ள சுதா,

நான் பம்பாய்க்கு வந்து நான்கு நாளாகிறது. அதற்குள் நீ என்னைக் கடிதம் எழுதும்படி கேட்டு விட்டாய். நான் இங்கே தங்கப் போவது ஒரே வாரம் தானே. ஆனால் நீ என் கடிதம் மிகவும் ரசமாக இருக்கும் பம்பாய் சமாசாரங்களை நேரில் சொல்லும் வரை பொறுமை இல்லை என்று வேறு எழுதியிருக்கிறாய். நீ பம்பாய்க்கு இரண்டு தடவை உன் சித்தி வீட்டில் மாதக் கணக்காய் இருந்திருக்கிறாய். நீ காணாத காட்சிகளா நான் கண்டு விடப் போகிறேன். ஆனால் நான் எங்கே போனாலும் உலகத்தைப் பல கோணங்களில் பார்ப்பேன்; தனிக் கண்களால் பார்ப்பேன் என்றெல்லாம் புகழ்ந்து விட்டாய். புகழ்ச்சியில் நூற்றுக்கு நூறு லாகிரி இருக்கிறது. என்னைத் தேடி வலுவில் வரும் புகழ்ச்சியை விட நான் என்ன ஆத்ம ஞானியா! அல்லது ஏமாந்தவளா! என் கண்கள் கண்டு மனம் அறிந்ததை உனக்கு எழுதுகிறேன்.

கடைக்குப் போய்ச் சாமான்கள் வாங்குவது ஒரு கலை. வந்த விருந்தினரை அழகாக உபசரிப்பது ஒரு கலை. அது நம் நாட்டுக்கே ஏற்பட்ட தனிப் பண்பு. ஏன்! வாழ்க்கையே ஒரு கலை தானே. குடும்பப் பெண்கள் தம் கணவனுடன் ஒத்துப் போவது ஒரு உயர்ந்த கலை. பொதுவாக எல்லா கணவன்மார்களும் தன் மனைவி புத்திசாலியாகவும் எதற்கும் ஒத்துப் போகும் குணம் படைத்தவளாகவும், செலவு குறைவாகச் செய்பவளாகவும், குடும்பத்துக்கும் குழந்தைகளுக்கும் உழைப்பவளாகவும் மிகவும் அடக்க முள்ளவளாகவும் இருக்க வேணுமென்று விரும்புகிறார்கள். அது மறுக்க முடியாத உண்மை. ஆனால் அதே சமயத்தில் அவர்கள் தாங்கள் மனைவிக்கு உகந்தவளாக இருக்க வேணுமென்பதைச் சிந்திப்பதில்லை. நாம் தான் அவர்களைச் சரிகட்டிக் கொண்டு போய் வழக்கம் செய்து விடுகிறோமே! கணவன் மனைவி தர்மம் யுகத்திற்கு யுகம் மாறுகிறது. காலத்திற்கேற்ப பரஸ்பரம் மனம் கோணாமல் நடக்கும் தாம்பத்யத்தைப் பார்க்க எனது பம்பாய்ப் பிரயாணம் ஒரு சந்தர்ப்பத்தை அளித்ததைப் பற்றித்தான் எழுதப்போகிறேன்.

நீ எங்கே போனாலும் ஒரு நாளைக்குமேல் தங்க மாட்டாயே! உனக்கு ஒரு வாரம் எப்படி இருப்புக் கொள்ளுமென்று ஆச்சரியத்துடன் கேட்கிறாய்.

ஆம், இந்தப் பிரயாணம் அதற்கு விதி விலக்கு. நேற்று அதிகாலை இயற்கைக் காட்சிகளை ரசித்துக் கொண்டிருந்தேன். கண்ணுக்கெதிரே வெகு சமீபத்தில் அமைதியான கடல். கதிரவன் தன் பொன்னிறக் கதிர்களால் இப்பூவுலகைத் தழுவ வந்து கொண்டிருந்தான். கடல் அலைந்து கொண்டிருந்தது.

பலவித வர்ணத்தின் அலைகள். அவைகளைக் காண ஓடி வருவது போன்ற இளம் நீர் கொண்ட மேகங்கள். கடற் கரையில் ஆங்காங்கு குழந்தைகள் விளையாடுகிறார்கள். அந்த அதி காலை வேளை எவ்வளவு ரம்மியமாக இருக்கிறதோ அம்மாதிரி வாழ்க்கையிலும் அவர்கள் காலைப் பருவத்திலிருப்பதால் ரம்மியமாகக் காணப்படுகிறார்கள். பக்கத்து அறையில் வீட்டுக்காரத் தம்பதிகளின் பேச்சு தற்செயலாக என் காதில் விழுந்தது. (நானாக அதை ஒட்டுக் கேட்க வில்லை.)

"கமலா இன்று எந்த இடமெல்லாம் பார்க்கப் போகிறாய்! உனக்குத் தகுந்தபடி என் அவகாசத்தைச் சரிப்படுத்திக் கொள்ளுவதற்கு முயற்சிக்கிறேன்."

"மார்க்கெட்டுக்குப் போய்க் காய்கறிகள் வாங்கணும். பிறகு அவர்களைக் கப்பலுக்கு அழைத்துப் போய்க் காட்ட வேண்டும். அவகாசம் கிடைக்கும் பொழுது நாம் ஊருக்குப் போகச் சாமான்களை வாங்க வேண்டும். சாப்பாடு ஆனதும் உங்களைக் காரியாலயத்தில் விட்டு விட்டு வந்து நான் வண்டியுடன் வந்து மற்ற வேலைகளை எல்லாம் பார்க்கிறேன்."

"சரி நான் என் வேலைகளை உனக்குத் தகுந்தபடி மாற்றிக் கொள்கிறேன். வந்தவர்களுக்கு முகம் கோணாமல் செய்யவேண்டும்." பிறகு தாழ்ந்த குரலில் பேசுவது என் காதில் விழவில்லை. அது பேச்சாக இராது. மந்திரமாக இருக்கலாமல்லவா! வந்தவர்களை மனம் கோணாமல் உபசரிப்பது என்ற உபதேசம் அந்த அம்மாள் கணவருக்குச் செய்தாளா! அல்லது அவர்தான் மனைவிக்குச் சொல்லிக் கொடுத்தாரா! அல்லது இருவர் மனமும் பார்க்கும் கண்ணாடிகளாயென்று என் மனம் பெரிய ஆராய்ச்சியில் ஈடுபட்டு விட்டது.

வந்த விருந்தினர்களை உபசரிப்பது ஒரு கலையென சொன்னேனல்லவா!' நமக்கு விருந்தினரை வைத்து நடத்துவது சிரமம் தான். ஆனால் அதில் இன்பம் இல்லையென சொல்ல முடியுமா! சற்று ஆழ்ந்து யோசித்தால் உலகமே இன்ப மயமானது. அதை நம்முடைய அறியாமையினால் துன்பம் ஆக்கிக் கொள்ளுகிறோம். அன்பு உலகத்தை இயக்கும் மூன்று சக்திகளில் சிறந்தது. எல்லாவற்றிற்கும் அன்பு எவ்வளவு அவசியமோ அவ்



